0-90

# யுனானி மருந்துகளின் செய்முறை



IMPCOPS

ஸ்தாபிதம் 1944

தி இந்தியன் மெடிகல்
பிராக்டிஷனர்ஸ் கோவாபரேடிவ் பார்மஸி
அண்டு ஸ்டோர்ஸ், லிமிடெட் X-185

அடையாறு, சென்னை-20.

தந்தி : தசமூலா

தொலைபேசி எண். 71013 71014

# யுனானி மருந்துகளின் செய்முறை




கிறுவியது 1944

தி இந்தியன் மெடிகல்
பிராக்டிஷனர்ஸ் கோவாபரேடிவ் பார்மஸி
அண்டு ஸ்டோர்ஸ், லிமிடெட் X-185

அடையாறு, சென்னை-20.

# முகவுரை

எம்மால் தயாரிக்கப்படும் யுனானி வைத்திய மருந்துகளின் செய்முறையும், அளவும், நீங்கும் பிணிகளும் கொண்ட யுனானி வைத்திய மருத்துவத் தொகுதி 1953-ல் ஆங்கிலத்தில் பிரசுரிக்கப்பட்டது. ஆங்கிலம் அறிந்த வைத்தியர்களுக்கு அது அதிகமாக உபயோகமாயிற்று. ஆந்திர தேசத்திலிருக்கின்ற இந்திய வைத்தியர்களின் உபயோகத்திற்காகவும், யுனானி வைத்தியத்தின் சிறப்பை தமிழரல்லாதார் அறிந்து உபயோகிக்கவும் யுனானி வைத்தியத் தொகுதி தெலுங்கு பாஷையிலும் வெளியிடப்பட்டு இருக்கின்றது. அந்த புஸ்தகத்தை ஆங்கிலமறியாத வைத்தியர்களும் பிறரும் அறிய தமிழ். மொழியிலும் மொழி பெயர்த்து வெளியிட்டு இருந்தோம். அத் தமிழ் மொழி பெயர்ப்பின் இரண்டாவது பதிப்பு இப் பொழுது பிரசுரமாகிறது.

பிரசுரிப்பாளர்.

# பொருளடக்கம்

## பிரிவு—1 அர்க்கியாத்



## பிரிவு—2 அத்வியா

## பிரிவு—6 ஜவாரிஷாத்

## பிரிவு—21 ஸிமாத் (பசை)



## பிரிவு—22 ஜரூர் (தூவும் பவுடர்)

# அர்க்கங்கள்

''கரய அம்பீக்'' அல்லது ''அர்க்க யந்திரம்'' என்னும் ஒரு வகை வாலையினுதவியால் நீராவி குளிர்ச்சியாக்கப்பட்டு அர்க்கங்கள் தயாரிக்கப்படு கின்றன. திரவ பதார்த்தங்களுடன் மருந்துச் சரக்கு கள் கொதிக்கும்பொழுது உண்டாகும் நீராவி பிணி களைத் தீர்க்க வல்லது. அந்த நீராவியை முறைப்படி குளிரச் செய்து திநீராக்குவதால் அவைகளை உட் கொள்வது சுலபமாகிறது. மேலும் அப்பட்டமான சரக்கிலுள்ள மனதிற்கு ஒவ்வாத மணம், ருசி முதலியவைகள் அந்தச் சரக்குகளைக் கொண்டு உண்டாக்கிய அர்க்கத்தில் பெரும்பாலும் தோன்றுவ தில்லை. ஓமம், சோம்பு, ஜீரகம், சந்தனம், நன்னாரி போன்ற வாசனைச் சரக்குகளில் நின்றும், ரோஜா போன்ற புஷ்பங்களில் நின்றும். கொதிக்கும்போது நஷ்டமாகும் முக்கியமான எண்ணைச் சத்துக்கள் முதலியவற்றை அர்க்க முறையால் எளிதில் சேகரிக்க லாம். ஆஸவம். அரிஷ்டம் இவைகளைக் கொதிக்க வைத்தும் இம்முறையால் மத்யாம்சத்தைத் தனித்துப் பெறலாம்.

தண்ணீரை இம் முறையால் தீநீராக்கி உட் கொள்ளவும். கண் மருந்துகளுக்கும் உபயோகிப்ப துண்டு, மேலும் மருந்துச் சரக்குகளின் பிணி தீர்க்கும் குணங்களை திரவ ரூபத்தில் வெகு நாட்கள் வரை சேமித்துக் காக்க இந்த முறை மிகவும் உபயோக மானது.

**செய்முறை :—**

குறிப்பிட்ட சரக்குகளை ஒன்றிரண்டாகத் தூளாக்கி வேண்டுமளவு தண்ணீர் விட்டு ஓர் இரவு ஊறவைக்கவும். மறு நாள் காலை அந்தக் கலவையை வாலையிலிட்டு எரித்து நீராவியைக் குளிரச் செய்து அர்க்கத்தைச் சேகரிக்கவும். ஆரம்பத்தில் இறங்கும் அர்க்கம் பின் இறங்குவதை விட தரத்திலும் குணத்திலும் மாறுபட்டது. ஆகையால் எல்லாவற்றையும் ஒரே பாத்திரத்தில் கலந்து குப்பியிலடைக்கவும்.

நீராவியைக் குளிரச் செய்யும் கருவியை "கரய அம்பீக்", என்றும் "அர்க்க யந்திரம்" என்றும் கூறுவர். இது மூன்று பாகங்கள் கொண்டது. அவை :—

1. கலவையைத் தாங்கி நிற்கும் அடிபாகம்.

2. நீராவியைக் குளிரச் செய்யக் கொண்டு செல்லும் குழாயுடன் கூடிய பொருத்தான அடிபாகத்தின் மூடி.

3. நீராவியைக் குளிரச் செய்யும் குளிர்ந்த தண்ணீர் நிறைந்த பகுதி.

1. அடிபாகத்தில் விசேஷமான சிக்கல் கிடையாது. மூடியாக அமையும் பகுதி அத்துடன் நன்கு பொருந்த வேண்டும். கலவையை ஊற்றியபின் இவை சேருமிடத்தை மாவு போன்றவைகளைக் கொண்டு அல்லது சீலை மண் கொண்டு பூசிப் பிணைத்து நீராவி வெளியேற விடாது செய்ய வேண்டும். அடிப்பாகத்

திலேயே விளிம்பைச் சுற்றிச் சிறிய பாத்தி போல் அமைத்து மூடியை அதனுள் இருத்திப் பாத்தியைச் சுற்றிலும் தண்ணீர் நிரப்பி வருவதாலும் நீராவியை வெளியேற விடாது தடுக்கலாம்,

2. மூடியின் நடு மையத்தில் ஆரம்பிக்கும் இடத்தில் சிறிது அகன்று மேலே செல்லச் செல்லக் குறுகிய குழாயைக் குறுக்காகவோ கவிழ்ந்த 'ப' போன்றோ அமைக்க வேண்டும். அது முடியும் இடம் குளிரச் செய்யும் பாகத்தில் நீராவியைக் கொண்டு செல்ல அமைத்த குழாயுடன் நன்கு பொருந்தி அமைந்து மறை ஆணியால் பிணைக்கப்பட வேண்டும்.

3. குளிரச் செய்யும் பாகம் அடிபாகத்தில் உயர அளவில் வட்டமானதோர் நீண்ட பாத்திரத்தாலனது. அதனுள் நீராவியைக் குளிரச் செய்யக் கொண்டு செல்லும் குழாய் சுருண்டு சுருண்டு அமைந்து அடிப் புறமாகப்பக்க வாட்டில் வெளியேறுகிறது. இதன் வழியேதான் குளிர்ந்த நீராவி 'அர்க்கமாகச் சேகரிக் கப்படுகிறது.

இந்தச் சுருண்ட குழாயை எப்பொழுதும் குளிர்ந்த தண்ணீரில் மூழ்கியிருக்கும்படி செய்ய அந்தப் பாத்திரத்தின் அடிப் புறத்தில் பக்க வாட்டில் துளையிட்டுக் குளிர்ந்த தண்ணீரை உட்செலுத்த ஓர் குழாயும், மேல் புறத்தில் துளையிட்டு நீராவியின் உஷ்ணத்தால் சூடான தண்ணீரை வெளியேற்ற ஓர் குழாயும் அமைக்கப்பட வேண்டும். நீர் மட்டம் உயரமாக இருக்கும் இடங்களில் அடி பாகத்திய

குழாயுடன் தண்ணீர் வழங்கும் குழாய்களைப் பிணைத்தமைக்கத் தண்ணீரின் அழுத்தம் காரணமாகக் குளிர்ந்த ஜலம் உட் சென்று சூடான தண்ணீரை வெளியகற்றி நீராவியை நல்ல முறையில் குளிரச் செய்கிறது.

இந்தப் பாத்திரத்தின் அடி பாகமும். சலவை தாங்கும் பாத்திரத்தின் உடல் நடு மையமும் ஒரே மட்டத்தில் அமைந்து அவை முக்காலிகளில் நிலை கொண்டிருக்கும்.

நீர் மட்டம் உயரமில்லாத இடங்களில் மூடியிலேயே நீராவியைக் குளிரச் செய்ய மேற்புறத்தில் பாத்தியை அமைத்துத் தயாரிக்கலாம். பாத்தியில்நின்றும் சூடான தண்ணீரை வெளியேற்ற ஓர் குழாயும், குளிர்ந்த நீராவியைச் சேகரிக்க ஓர் குழாயும் அமைத்தல் வேண்டும். இவை முறையே மூடியின் வெளிப்புறமும், உட்புறமும் அமைய வேண்டும். மூடியின் உட்புற மேல் பாகம் கூண்டு போல் அமைந்து குளிர்ந்த நீராவித்திவிலைகளைக் கலவை தாங்கும் பாத்திரத்தில் ஓடிச் சேர விடாது தடுத்து நிறுத்தச் சுற்றிலும் சிறியதோர் வாய்க்கால் பெற்றிருக்க வேண்டும். இந்த வாய்க்காலில் நின்றும் குழாய் அமைத்து குளிர்ந்த நீராவித் திவிலைகளை (அர்க்கங்களை) வெளியேற்றிச் சேகரிக்க வேண்டும். கூண்டின் வெளிப் புறத்தில் ஓர் குழாயுடன் பாத்தி அமைத்துக் குளிர்ந்த தண்ணீர் ஊற்றி வரவும். தண்ணீர் சூடானவுடன் அதைக் குழாய் வழியே வெளியேற்றிக் குழாயை மூடிக் குளிர்ந்த தண்ணீர் நிரப்பி வரவும்.

அர்க்கம் வெளியேறும் பக்கத்தைச் சிறிது சாய்த்து அமைத்துக் கலவை தாங்கும் பாத்திரத்தின் அடியில் எரிக்க வேண்டும். அர்க்கம் வெளியேறும் குழாயுடன் ஓர் தென்னை ஓலையைப் பொருத்தி வாய்க் கால் போல் அமைத்து அர்க்கத்தைச் சேகரிக்கலாம்.

இதை உலோகங்களிலோ அல்லது மண் கொண்டோ தயாரிக்கலாம்.

புஷ்பங்கள், பழ வகைகள் மாம்ஸம் முதலிய வற்றை உபயோகித்து அர்க்கம் தயாரிக்க மற்ருேர் முறையும் உபயோகிக்கப்படுகிறது. இம் முறையில் உபயோகிக்கும் சரக்குகள் கருகி விடுமோ என்ற சந்தேகம் கூடக் கிடையாது.

உபயோகிக்க வேண்டிய சரக்குகளை நன்கு இடித்துக் கலவை தாங்கும் பாத்திரத்திலிட்டு அதைப் பாதிவரை தண்ணீரில் மூழ்கும்படியாகத் தண்ணீர் நிரப்பிய இருப்புச் சட்டி போன்றவற்றில் முக்காலி அல்லது செங்கல் இவற்றின் மேல் அமைத்து அதன் கீழ் எரிக்க வேண்டும். கொதிக்கும் தண்ணீரில் பக்கு வமாகி அர்க்கம் வெளியேறுவதால் தண்ணீரின் கலப் பற்ற அர்க்கத்தைச் சேகரிக்க முடிகிறது.

இரும்புப் பாத்திரத்தில் தண்ணீர் வற்ற வற்ற மேலும் மேலும் ஊற்றி எரித்து அர்க்கம் வெளி வருவது நிற்கும் வரை சேகரிக்கவும்.

100—150 கிராம் சரக்குகளை உபயோகித்து 800 மி. லி. அர்க்கம் தயாரிக்கலாம், முதல் நாளே 1600

லீடர் தண்ணீர் ஊற வைக்க 800 மி.லி. அர்க்கம் கிடைக்கும்.

பால் சேர்ந்த முறைகளில் அதனை எரிக்கும் முன்னரே சேர்க்க வேண்டும்.

கஸ்தூரி, அம்பர், குங்குமப்பூ, கற்பூரம் போன்ற வாஸனைச் சரக்குகளைத் துணியில் கட்டிச் சூடாக வெளியேறும் அர்க்கத்தின் திவிலைகளால் நனையுமாறு தொங்க விடவும். அவற்றுடன் ஊறி அதன் குணங்களுடன் அர்க்கம் சொட்டுகளாகப் பாத்திரத்தில் சேரும்.

பருப்பு வகைகளைச் சேர்க்குமிடத்து அவற்றைச் சிறிது தண்ணீர் சேர்த்து அரைத்துச் சேர்க்கவும்.

## பிரிவு-1 அர்க்கியாத்

### 1. அர்க் அப்ரேஷம்

| | | | |
|---|---|---|---|
| 1. | பட்டுக் கூண்டு–சுத்தி செய்தது | 228 | கிராம் |
| 2. | குலே கௌஜபான் | 48 | ,, |
| 3. | பாதரன்ஜ் போயா | 48 | ,, |
| 4. | பரஞ் மிஸ்க் | 48 | ,, |
| 5. | சந்தனம் வெள்ளை | 48 | ,, |
| 6. | புதினு உலர்ந்தது | 27 | ,, |

| | | |
|---|---|---|
| 7. | பஹ்மன்—வெள்ளை | 24 கிராம் |
| 8. | ,, சிவப்பு | 24 ,, |
| 9. | அரத்தை | 24 ,, |
| 10. | இலவங்கப் பத்திரி | 24 ,, |
| 11. | ரோஜாப்பூ உலர்ந்தது | 24 ,, |
| 12. | ஜாதிப் பத்திரி | 14 ,, |
| 13. | இலவங்கப் பட்டை | 14 ,, |
| 14. | ஏலரிசி | 14 ,, |
| 15. | பன்னீர் | 960 மி. லி. |
| 16. | அர்க் பேத் மிஸ்க் | 960 ,, |
| 17. | ஆப்பிள் பழச் சாறு | 960 ,, |
| 18. | பீஹி பழச் சாறு | 960 ,, |
| 19. | லவங்கப் பட்டைத் தீநீர் | 960 ,, |
| 20. | கொய்யாப் பழச் சாறு | 960 ,, |
| 21. | வெற்றிலை | 100 எண்ணிக்கை |
| 22. | குங்குமப்பூ | 5 கிராம் |
| 23. | அம்பர் | 5 ,, |

முதல் 14 சரக்குகளை 15 லிட்டர் தண்ணீரில் இரவு முழுவதும் ஊறவைக்கவும். மறு நாள் காலையில் மீதமுள்ள திரவங்களைச் சேர்த்து வாலையிலேற்றி எரித்து 10 லிட்டர் தீநீர் எடுக்கவும். நெ. 22.23 சரக்குகளை ஒரு சீலையில் முடித்து தீநீர் வரும் குழாயின் முகத்துவாரத்தில் கட்டி அதை நனைத்துக் கொண்டு தீநீர் வெளியேறுமாறு அமைத்துத் தீநீரை சேகரிக்கவும்.

**அளவு :** 30—60 மி.லி. தினம் 2 3 வேளைகள்.

**தீரும் நோய் :** இருதயத் துடிப்பு, மற்றும் இருதயக் கோளாறுகள்.

## 2. அர்க் அஜ்வாயன்

1 ஓமம் — 1 கிலோ கிராம்
2. தண்ணீர் — 12.500 லிட்டர்

சுத்தம் செய்த ஓமத்தை 8 மணி நேரம், நீரில் ஊற வைத்துப் பிறகு வாலையில் ஏற்றி எரித்து 90 லீடர் தீநீர் எடுக்கவும்.

**அளவு :** 30—60 மி. லீ. தினம் 2 3 வேளைகள்

**தீரும் நோய் :** அதிஸாரம், கிராணி, அக்னி மாந்தியம்.

## 3. அர்க் பாதியான்

1. சோம்பு — 600 கிராம்.
2. தண்ணீர் — 10 லீடர்.

சுத்தம் செய்த சோம்பை 8 மணி நேரம் நீரில் ஊற வைத்து பிறகு வாலையில் ஏற்றி எரித்து $7\frac{1}{2}$ லீடர் தீநீர் எடுக்கவும்.

**அளவு :** 30 முதல் 60 மி. லீ.

**தீரும் நோய்:** அஜீரணம், உப்புஸம், பசியின்மை.

## 4. அர்க் கௌஜபான்

1. பர்க்கௌஜபான் 1 கிலோ கிராம்
2. தண்ணீர் 10 லீடர்.

பர்க்கௌஜபானை 8 மணி நேரம் நீரில் ஊர வைத்து பிறகு வாலையில் ஏற்றி எரித்து 7½ லீடர் தீநீர் எடுக்கவும்.

**அளவு:** 30—60 மி. லீ.

**தீரும் நோய்:** உமிழ் நீர் சுரத்தல், ஜலதோஷம், காஸம் ச்வாஸம், இதய நோய்கள்.

## 5. அர்க் காபூர்

1. ஓமம் 1 கிலோ கிராம்.
2. கற்பூரம் 100 கிராம்
3. தண்ணீர் 12½ லிட்டர்.

அர்க் அஜ்வாயன் போன்றே தயாரிக்க வேண்டும். அர்க்கம் சேமிக்கும் கலத்தில் கற்பூரத்தைத் தூள் செய்து போட்டு இறங்கும் அர்க்கத்தின் சூட்டிலேயே கற்பூரத்தைக் கரையச் செய்து சேமிக்கவும்.

**அளவு :** *30—60 மி. லி.*

**தீரும் நோய் :** *அதிஸாரம், பேதி, கிராணி, அக்னி மாந்தியம்.*

## 6. அர்க் காஸ்னி

| | | |
|---|---|---|
| 1. | காஸினிக் கீரை விதை | 1 கி. கி. |
| 2. | தண்ணீர் | 10 லீடர். |

காஸினிக் கீரை விதைகளை 8 மணி நேரம் தண்ணீரில் ஊறவைத்துப் பிறகு வாலையிலேற்றி 7½ லிட்டர் தீநீராக எடுக்கவும்.

**அளவு :** *30—60 மி. லீ,*

**தீரும் நோய் :** *பித்தாதிக்கம், கல்லீரல், மண்ணீரல் பெருத்தல், காமாலை.*

## 7. அர்க் முஸாபி

| | | | |
|---|---|---|---|
| 1. | வேப்ப இலை | 50 | கிராம் |
| 2. | வேப்பம் பட்டை | 50 | ,, |
| 3. | மலைவேம்பின் பட்டை | 50 | ,, |
| 4. | ,, இலை | 50 | ,, |
| 5. | அத்திப் பட்டை | 50 | ,, |
| 6. | மகிழம் பட்டை | 50 | ,, |
| 7. | சிறு அம்மான் பச்சரிசி | 50 | ,, |

| | | |
|---|---|---|
| 8. | கரிசாலே | 50 கிராம் |
| 9. | ஜவான்ஸா இலே | 50 ,, |
| 10. | மாதுளம் பழதோல் | 50 ,, |
| 11. | அழுவாண இலே | 50 ,, |
| 12. | கொட்டைக் கரந்தை | 50 ,, |
| 13. | ஷாத்ரா | 50 ,, |
| 14. | முக்கா வேலே | 50 ,, |
| 15. | தமயா | 50 ,, |
| 16. | பரங்கிப்பட்டை | 50 ,, |
| 17. | தாமரைப் பூ | 50 ,, |
| 18. | ரோஜா மொக்கு | 50 ,, |
| 19. | தனியா | 50 ,, |
| 20. | சந்தனம் வெள்ளே | 50 ,, |
| 21. | சந்தனம் சிகப்பு | 50 ,, |
| 22. | காஸினி விதை | 50 ,, |
| 23. | காஸினி வேர் | 50 ,, |
| 24. | மஞ்ஜிஷ்டி | 50 ,, |
| 25. | பேத் இலே | 50 ,, |
| 26. | சிம்சுபாத்தூள் | 50 ,, |
| 27. | தண்ணீர் | 10 லிட்டர் |

கடினமான சரக்குகளே பொடித்து தண்ணீரில் 8 மணி நேரம் ஊர வைத்து பிறகு வாலேயில் ஏற்றி 7.500 லீடர் தீநீர் எடுக்கவும்.

**அளவு :** 30—60 மி. லீ.

**தீரும் நோய்:** இரத்தத்தைச் சுத்தி செய்ய, சரும ரோகங்கள்.

## 8. அர்க் முண்டி

1. கொட்டைக்கரந்தைப் பூ 600 கிராம்
2. தண்ணீர் 10 லீடர்.

கொட்டைக் கரந்தைப் பூவைத் தண்ணீரில் 8 மணி நேரம் ஊரவைத்துப் பிறகு, வாலையில் ஏற்றி தீநீராக 7.500 லீடர் எடுக்கவும்.

**அளவு:** 30—60 மி. லீ.

**தீரும்நோய்.** பார்வையைக் கூர்மையாக்க, இரத்தத்தைச் சுத்தி செய்ய, இருதயம், கல்லீரல், மூளை இவற்றிற்கு பலம் கொடுக்க.

## 9. அர்க் முல்லாயின்

1. பேதி உப்பு (Magsulph) —300 கிராம்
2. சோம்புத்தீ நீர் —600 மி. லி.

பேதி உப்பை சோம்புத் தீநீரில் கலந்து கரைத்து வடி கட்டவும்.

**அளவு:** 30—90 மி. லீ.

**தீரும் நோய்:** உப்புக் கலந்த பேதி மருந்து.

## 10. அர்க் ஜௌஹர்ஷிபா (அஜீப்).

| | | |
|---|---|---|
| 1. | கற்பூரம் | 10 கிராம். |
| 2. | புதினா பூ | 10 ,, |
| 3. | ஓமம் பூ | 5 ,, |

மூன்று சரக்குகளையும் கண்ணாடிக் குடுவையில் ஒன்றாகக் கலந்து மூடி, சூரிய வெப்பத்தில் வைக்க உள்ளிருக்கும் சரக்குகள் உருகி திரவமாகும்.

**அளவு :** 1—2 துளி.

**தீரும் நோய்:** வெளிபூச்சாக வலியை அகற்ற சீதபேதி காலரா போன்ற நிலைகளில் உள்ளுக்குக் கொடுக்கலாம்.

## 11. அர்க் ஷிபா சஷ்ம் (நெ. 1)

| | | |
|---|---|---|
| 1. | படிகாரம் | 10 கிராம். |
| 2. | பன்னீர் | 720 மி.லீ. |

படிகாரத்தை பன்னீரில் கரைத்து வடிகட்டவும்.

**அளவு :** கண் துளிகள்.

**தீரும் நோய் :** கண்வலியில் துவர்ப்பியாகவும், அழுகலகற்றியாகவும் உபயோகிக்க.

# பிரிவு—2 அத்வியா

## 12. அனேஷ் தாரு ஸாதா

| | | | |
|---|---|---|---|
| 1. | ரோஜா மொக்கு | 60 | கிராம் |
| 2. | கோரைக் கிழங்கு | 50 | ,, |
| 3. | லவங்கம் | 30 | ,, |
| 4. | ரூமி மஸ்தகி நெ. 1 | 30 | ,, |
| 5. | அஸாரூன் | 30 | ,, |
| 6. | ஜடாமாஞ்சில் | 30 | ,, |
| 7. | சிற்றேலம் | 20 | ,, |
| 8. | பேரேலம் | 20 | |
| 9. | கிச்சிலிக்கிழங்கு | 20 | . |
| 10. | ஜாதிப்பத்திரி | 20 | ,, |
| 11. | ஜாதிக்காய் | 20 | . |
| 12. | லவங்கப்பட்டை | 20 | , |
| 13. | பருப்பு கீரை விதை | 20 | ,, |
| 14. | குங்குமப்பூ | 20 | ,, |
| 15. | நெல்லிக்காய் | 650 | ,, |
| 16. | கற்கண்டு | 1020 | ,, |
| 17. | தேன் | 2040 | ,, |

நெ. 4, 14 நீங்கலாக முதல் 15 சரக்குகளை நன்ருக பொடித்து சலித்துக் கொள்ளவும். மஸ்தகியை கல்வத்திலிட்டு அரைத்துக் கொள்ளவும்.

தேனும், கற்கண்டும் கரைவதற்குப் போதுமான அளவு தண்ணீரை சேர்த்து அடுப்பிலேற்றி அத்துடன் குங்குமப்பூவையும் அரைத்துச் சேர்த்து பாகுபதம் வரும் வரைக் காய்ச்சி சிறிது சிறிதாக சூரணத்தைத் தூவி நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு** : *6—12 கிராம் தினம் 2 அல்லது 3 வேளை.*

**தீரும் நோய்** : *அமிலக்குறைவு, பேதி, ஜீரணக் கோளாறுகள், அன்னத்துவேஷம்.*

## 13. அனேஷ்தாரு லூலுவி

1. அம்பர் — 1.6 கிராம்
2. குங்குமப்பூ — 7.5 ,,
3. முத்து — 10 ,,
4. பவளப்புத்து — 10 ,,
5. யஷப் — 10 ,,
6. கோரைக் கிழங்கு — 10 ,,
7. இஸ்கிர் — 10 ,,
8. பட்டுக் கூண்டு–சுத்தி செய்தது — 20 ,,
9. மூங்கிலுப்பு — 20 ,,
10. இலவங்கப்பத்திரி — 20 ,,
11. ஜடாமாஞ்சில் — 20 ,,
12. அகில் கட்டை — 12.5 ,,
13. காவிக்கல் — 20 ,,

14. நெல்லிக்காய் சாறு 120 மி. லி.
15. தேன் 300 கிராம்
16. கற்கண்டு 600 ,,

முத்து, யஷப் இவற்றை பன்னீரில் அரைத்து உலரவைக்கவும். மற்ற சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துக் கொள்ளவும். பிறகு 720 மி. லி. தண்ணீரில் பட்டுக்கூண்டுகளை இரவு முழுவதும் ஊறவைத்து மறுநாள் காலையில் கொதிக்க வைத்து வடிகட்டிய கஷாயத்துடன் தனியே அறைத்த குங்குமப்பூ விழுது, பச்சை நெல்லிக்காய்ச்சாறு, தேன், கற்கண்டு இவற்றைச் சேர்த்துப் பாகுபதம் வரும். வரை காய்ச்சி பாகத்தில் எல்லா சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்கு கலந்துப் பத்திரப் படுத்தவும்.

**அளவு**: 3—6 கிராம் தினம் இரு வேளை.

**தீரும் நோய்:** அன்னத்துவேஷம், அமிலக் குறைவு, பேதி, (க்ஷய ரோகத்தில் ஏற்படும் கோளாறு), குளிர்ச்சி உண்டாக்கி, வெப்பகற்றி, நரம்புகளுக்கும், சரீரத்திற்கும் பலம் உண்டாக்க.

## 14. தவா-உல்-மிஸ்க் மோததில் ஸாதா

1. ரூமி மஸ்தகி நெ. 1 10 கிராம்
2 உஷ்ணு 10 ,,
3. ஏலக்காய் 10 ,,

| | | |
|---|---|---|
| 4. | அகில் கட்டை | 15 கிராம் |
| 5. | பாதரஞ்ஜ் போயா | 15 ,, |
| 6. | பட்டு கூண்டு—சுத்தி செய்தது | 20 ,, |
| 7. | ரோஜா மொக்கு | 20 ,, |
| 8. | லவங்கப்பட்டை | 20 ,, |
| 9. | பஹ்மன்ஸுர்க் | 20 ,, |
| 10. | பஹ்மன்ஸுபீத் | 20 ,, |
| 11. | தருனஜ் அக்ரபி | 20 ,, |
| 12. | சந்தனம் வெள்ளை | 30 ,, |
| 13. | சந்தனம் சிகப்பு | 30 ,, |
| 14. | மூங்கிலுப்பு | 30 ,, |
| 15. | தனியா | 30 ,, |
| 16. | குலேகௌஜபான் | 30 , |
| 17. | நெல்லிக்காய் | 30 ,, |
| 18. | பவளப் புத்து | 30 ,, |
| 19. | பருப்புக் கீரை விதை | 30 ,, |
| 20. | ஜரிஷ்க் | 50 ,, |
| 21. | ஆப்பிள் முரப்பா | 940 ,, |
| 22. | கற்கண்டு | 940 ,, |
| 23. | தேன் | 940 ,, |

பட்டுக் கூண்டுகளை இரவில் 720 மி. லி தண்ணீரில் ஊற வைத்து மறுநாள் காலையில் கஷாயமாகக் காய்ச்சி எடுக்கவும். மற்ற பொடிக்க வேண்டிய சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சல்லித்துக் கொள்ளவும், கற்கண்டை கஷாயத்தில் கரைத்து

அடுப்பிலேற்றி ஜரிஷ்க், ஆப்பிள் முரபா இவற்றையும் சுத்தம் செய்து தனித்தனியே கல்வத்திலிட்டு அரைத்து கலந்து பாகுபதம் வரும் வரை காய்ச்சி பதத்தில் பொடித்த சூரணங்களை சிறிது சிறிதாகச் சேர்த்து பின்னர் தேனையும் நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு** : 6—12 கிராம் தினம் 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்** : இருதய பலவீனம். இருதயத்தசை க்ஷயம், உணர்ச்சியைத் தூண்ட.

## 15. தவா உல் மிஸ்க் மோததில் பாஜ்வாஹிர்

| | | |
|---|---|---|
| 1. | ஜரிஷ்க் | 12 கிராம் |
| 2. | மூங்கிலுப்பு | 12 ,, |
| 3. | சந்தனம் சிகப்பு | 12 ,, |
| 4. | சந்தனம் வெள்ளை | 12 ,, |
| 5. | தனியா | 12 ,, |
| 6. | குலேகௌஜபான் | 12 ,, |
| 7. | நெல்லிக்காய் | 12 ,, |
| 8. | பருப்புக் கீரை விதை | 12 ,, |
| 9. | ரோஜா மொக்கு | 7 ,, |
| 10. | லவங்கப்பட்டை | 7 ,, |
| 11. | தருனஜ் அக்ரபி | 7 ,, |
| 12. | பட்டுக் கூண்டு (சுத்தி செய்தது) | 7 ,, |

| | | |
|---|---|---|
| 13. | பஹ்மன்ஸுபீத் | 7 கிராம் |
| 14. | பஹ்மன் ஸுர்க் | 7 ,, |
| 15. | கஹ்ருபா | 7 ,, |
| 16. | முத்து | 7 ,, |
| 17. | குங்குமப்பூ | 7 ,, |
| 18. | அகில்கட்டை | 5 ,, |
| 19. | பாதரன்ஜ் போயா | 5 ,, |
| 20. | மஸ்தகி | 4 ,, |
| 21. | உஷ்ஞ | 4 ,, |
| 22. | ஏலரிசி | 4 ,, |
| 23. | அம்பர் | 2 ,, |
| 24. | கஸ்தூரி | 2 ,, |
| 25. | சர்க்கரை | 320 ,, |
| 26. | தாழம்பூ தீநீர் | 100 மி. லி. |
| 27. | தேன் | 160 கிராம் |
| 28. | ஆப்பிள் முரபா | 160 ,, |
| 29. | வெள்ளிரேக்கு | 10 ,, |

600 மி. லி. தண்ணீரில் பட்டுக் கூண்டுகளை இரவில் ஊறவைத்து மறுநாள் காலையில் கஷாயமாகக் காய்ச்சி எடுக்கவும். கஹ்ருபா, முத்து இவற்றை 500 மி. லி. பன்னீரில் சேர்த்துக் கல்வத்திலிட்டு மெதுவாக அரைத்து உலர்த்திப் பொடிக்கவும். மற்ற பொடிக்க வேண்டிய சரக்குகளையும் நன்ருகப் பொடித்து சல்லித்துக் கொள்ளவும். சர்க்கரையுடன் மேற்கூறிய கஷாயத்தைச் சேர்த்துச் சிறிது காய்ச்சி

குங்குமப்பூ, ஆப்பிள் முரபா இவற்றைத் தனியே கல்வத்தில் நன்ருக அரைத்து மேற்கூறிய பாகத்தில் சேர்த்து மீண்டும் காய்ச்சிப் பாகத்தில் எல்லா சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலக்கவும். ஆறிய பின்னர் தேன், மீதமுள்ளவாசனைப் பொருள்கள், கஹ்ருபா, வெள்ளிரேக்கு, முத்து ஆகியவற்றைச் சேர்த்துக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு** : 3—6 கிராம்.

**தீரும் நோய்** : இருதய பலவீனம், இதயத் தசை க்ஷயம், உணர்ச்சியைத் தூண்ட.

## 16. தவா-உல்-குர்கும்

| | | | |
|---|---|---|---|
| 1. | குங்குமப்பூ | 17 | கிராம் |
| 2. | ஸலீகா | 17 | ,, |
| 3. | ஜடாமாஞ்ஜில் | 17 | ,, |
| 4. | அஸாரூன் | 17 | ,, |
| 5. | சிலாரஸ் | 17 | ,, |
| 6. | முர்மக்கி | 8.5 | ,, |
| 7. | கோஷ்டம் | 8.5 | ,, |
| 8. | * பூகே-அஸ்கர் | 8.5 | ,, |
| 9. | லவங்கப் பட்டை | 8.5 | ,, |
| 10. | அங்கூர் திராக்ஷை | 30 | ,, |
| 11. | தேன் | 420 | ,, |

* நில வேம்பு சேர்ப்பது வழக்கம்.

சிலாரஸத்தை வெய்யிலில் நன்ருக உலர்த்திப் பொடித்துக் கொள்ளவும். திராக்ஷையைக் கல்வத்தி லிட்டுநன்ருக அரைக்கவும். மற்ற 8 சரக்குகளையும் நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். தேனுடன் சிறிதளவு தண்ணீர் சேர்த்துக் காய்ச்சி அத்துடன் திராக்ஷ விழுதையும் சேர்த்துப் பாகுபதம் வரும் வரை காய்ச்சிப் பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்துக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு:** 3—6 கிராம் தினம் 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்:** கபம் காரணமாக உள்ள இதய வியாதிகளில் தபிதுல் வர்த்துடன் சேர்த்துக் கொடுக்க, காமாலை.

## 17. தவா-உல்-லக்

| | | | |
|---|---|---|---|
| 1. | உஸர் ஏ கபீஸ் | 50 | கிராம் |
| 2. | சோம்பு | 50 | ,, |
| 3. | துக்மே பதுவா | 50 | ,, |
| 4. | ,, காஸஊஸ் | 80 | ,, |
| 5. | அப்ஸன்தீன் ரூமி | 60 | ,, |
| 6. | காஸினி விதை | 100 | ,, |
| 7. | துக்மே—கரப்ஸ் | 40 | ,, |
| 8. | ரேவல் சின்னிகட்டை | 30 | ,, |
| 9. | கொம்பரக்கு | 30 | ,, |
| 10. | தேன் | 980 | ,, |

கொம்பரக்கை தண்ணீரில் நன்ருக சுத்தம் செய்து, உலர்ந்த பிறகும் மற்ற சரக்குகளைத் தனித்தும் பொடித்துச் சலித்துக் கொள்ளவும். தேனுடன் சிறிதளவு தண்ணீர் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாக சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 3—6 கிராம்.

**தீரும் நோய் :** கல்லீரல், மண்ணீரல் வீக்கங்கள், மண்ணீரல் பெருக்கம், பல் ஈரல் சிதைவு, குண்டிக்காய்களில் கல்லடைப்பு.

## 18. தவா பேசிஷ்

| | | |
|---|---|---|
| 1. கசகசாத் தோல் | 30 | கிராம் |
| 2. பிஞ்சுக் கடுக்காய் | 30 | ,, |
| 3. கசகசா | 15 | ,, |
| 4. நெய் | 60 | ,, |

முதல் 3 சரக்குகளை நெய்யில் இளஞ்சிவப்பு ஆகும் வரை வறுத்து, சூடாக இருக்கும் போதே உரலில் போட்டு நன்ருக அறைத்து வைத்துக் கொள்ளவும்.

**அளவு :** 3—6 கிராம்.

**தீரும் நோய்:** கடுமையான சீதக்கட்டு, ரத்தக் கடுப்பு, சீதரத்த பேதி.

தேனுடன் அரைத்துத் தயாரிப்பதும் உண்டு.

## 19. தவா ஷிபா ஹலாக்

| | | |
|---|---|---|
| 1. | முர்மக்கி | 30 கிராம் |
| 2. | மாசிக்காய் | 30 ,, |
| 3. | குரோசானி ஓமம் | 60 ,, |
| 4. | வெங்காரம் | 30 ,, |
| 5. | படிகாரம் | 30 ,, |
| 6. | தேன் | 1.800 கி. கிராம் |

நெ. 4, 5 சரக்குகளை மண் அகலில் வைத்து அதிலிருக்கும் நீரெல்லாம் வற்றும் வரை நன்றாக வறுக்கவும். முதல் 3 சரக்குகளை நன்றாக பொடித்துக் கொண்டு, எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு வேண்டிய அளவு தேன் கலந்து நன்றாக அறைத்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** தொண்டைக்கு தடவ.

**தீரும் நோய்:** தொண்டையினுள் கிரந்திகளின் அழற்சி (டான்சிலைடிஸ்), உள் நாக்கு வளருதல் அடினாயிட்ஸ் முதலியன.

## 20. நவா துருஷ்

| | | |
|---|---|---|
| 1. | மிளகு | 50 கிராம் |
| 2. | சுக்கு | 50 ,, |
| 3. | கரியுப்பு | 50 ,, |
| 4. | சோற்றுப்பு | 50 ,, |
| 5. | இந்துப்பு | 50 ,, |
| 6. | வாயுவிடங்கம் | 50 ,, |
| 7. | பச்சை புதினா இலை | 100 ,, |
| 8. | எலுமிச்சம் பழச்சாறு | 120 மி. லி. |

முதல் 6 சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துக் கொள்ளவும்.

புதினா இலைகளில் நின்றும் சாறு எடுத்து வடிகட்டி அத்துடன் எலுமிச்சம் பழத்தின் சாற்றையும், எல்லாச்சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலக்கி வெய்யிலில் வைத்துப் பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 3—6 கிராம் தினம் **2** அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** இரைப்பை, கல்லீரல் இவைகளைப் பற்றியக் கபக் கோளாறுகள்.

## 21. தவா உல் மேதா

1. குல்கந்து 1 கி. கி.
2. இஞ்சி முரப்பா 1 ,,

இரண்டு சரக்குகளையும் உரலில் போட்டு நன்முக அரைக்கவும். சூரிய வெப்பத்தில் ஈரம் வற்றும் வரை ஒரு நாள் வைத்திருந்தெடுக்கவும். அரைக்கும் போது தண்ணீர் சேர்க்கக் கூடாது.

**அளவு :** 12—24 கிராம் தினம் 2 வேளை.

**தீரும் நோய் :** உடலுக்கு அசைவு கொடுக்காமல் இருப்பவர்களுக்கு ஏற்படும் அன்னத் துவேஷம், சிறு மலமிளக்கி.

## 22. தவா துரஞ்ஜபீன்

| | | |
|---|---|---|
| 1. | துரஞ்ஜபீன் | 140 கிராம் |
| 2. | ஸாலாப் மிஸ்ரி | 30 ,, |
| 3. | பசுவின் பால் | 400 மி. லி. |
| 4. | சர்க்கரை | 150 கிராம் |

பசுவின் பாலுடன் ஸாலாப்மிஸ்ரியைச் சேர்த்துப் பதமாகும் வரைக் காய்ச்சி அறைத்துக் கொள்ளவும். துரஞ்ஜபீனை தண்ணீருடன் கொதிக்க வைத்து வடிகட்டி அந்த கஷாயத்துடன் சர்க்கரையைச் சேர்த்துப்பாகு வைத்து ஸாலாப் மிஸ்ரி விழுதையும் அதில் கரைத்துக் கொதிக்க வைத்துப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 6—12 கிராம் தினம் 2 வேளை.

**தீரும் நோய் :** சூடான சுபாவம் உள்ள சரீரத்தில் ஏற்படும் போக சக்திக் குறைவு.

## 23. தயா குஸா

| | | | |
|---|---|---|---|
| 1. | கசகசா & தோல் (முழுவதும்) | 20 | எண்ணிக்கைகள் |
| 2. | அதிமதுரம் | 72 | கிராம் |
| 3. | இஸப் கோல் | 36 | ,, |
| 4. | கித்மி விதை | 18 | ,, |
| 5. | குபாஸி விதை | 18 | ,, |
| 6. | வேலம்பிஸின் | 18 | ,, |
| 7. | பாதாம்பிஸின் | 18 | ,, |
| 8. | பீஹி விதை | 18 | ,, |
| 9. | கற்கண்டு | 960 | ,, |

பிசின்கள் நீங்கலாக மற்ற சரக்குகளை நன்ருகப் பொடித்துத் தண்ணீரில் 8 மணி நேரம் ஊற வைத்து பிறகு காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் கற்கண்டைக் கரைத்துக் கொதிக்க வைத்துப் பதத்தில் தனித்தனியே பொடித்த பிசின்களைச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 12—24 கிராம் தினம் 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** தொண்டை அழற்சி, வறட்டு இருமல், க்ஷய இருமல்.

# பிரிவு 3

## ஹபூப் (மாத்திரைகள்)

### மாத்திரை உருட்டுவதற்கான பொது விதிகள்

ஹப் என்றால் மாத்திரை எனப் பொருள். இவை பெரும்பாலும் உட்கொள்ள உபயோகிக்கப்படுவதால் முறைப்படி நன்கு சுத்தி செய்த மூலப் பொருள்களையே உபயோகிக்க வேண்டும். இல்லாவிடில் இவை கொடிய தீங்கை விளைவிக்கும்.

முறையில் மற்ற சரக்குகளுடன் லிங்கமும் கந்தகமும் கூறப்படுமிடத்து இரண்டையும் தனியே சுத்தி செய்து பிறகு பொடித்துச் சேர்த்தரைத்த பின்னரும் லிங்கம் மாத்திரம் கூறப்படின் அதைச் சுத்தி செய்து அரைப்புக்குக் குறிப்பிட்டுள்ள திரவத்தில் சிறிது சேர்த்து நன்கு அரைத்த பின்னருமே பொடித்துச் சலித்த மற்ற சரக்குகளின் சூர்ணம் முதலியவற்றுடன் சேர்க்க வேண்டும்.

அவற்றுடன் பஸ்மங்கள் கூறப்படின் அவைகளைச் சரக்குகளின் சூரணங்களைச் சேர்க்கும் முன் சேர்த்துச் சிறிது அரைத்துப் பின்னர் சூரணம் சேர்த்தரைக்கவும்.

அவற்றுடன் வெள்ளி அல்லது தங்கம் சேர்ந்தால் அவைகளை ரேக்காகச் செய்து ரஸத்துடன் சேர்த்தரைத்துப் பின்னர் கந்தகத்தைச் சேர்த்துக் கஜ்ஜளியாக்கவும். வத்ஸநாபி, எட்டிக் கொட்டை, ஊமத்தன் விதை இவைகளை சுத்தி செய்து தனியே சிறிது சாறு விட்டு ஊறவைத்து நன்கு அறைத்துச் சேர்க்க வேண்டும்.

நேர்வாளத்தைச் சுத்தி செய்து தனியே அரைத்து மாத்திரையாக உருட்டும் தருணத்தில் சேர்க்க வேண்டும். மற்ற தாவரச் சரக்குகளை சேர்க்கும் விஷயத்தில் அவைகளைப் பற்றிச் சூரணப்ரகரணத்தில் கூறிய பொது விதிகளை அனுசரிக்க வேண்டும்.

கலவை மூழ்கும் அளவு சாறுவகைகள், கஷாயம் முதலியவற்றை ஊற்றி வைப்பதை ' பாவனை" என்பர். பல தடவைகள் பாவனை செய்யும்படி கூறுமிடத்து முன் ஊற்றிய திரவம் ஓரளவு வற்றிய பின்னரே இரண்டாம் முறைதிரவம் ஊற்ற வேண்டும். கல்வத்தி லிட்டுத் தொடர்ந்து அரைப்பது திரவத்தை விரைவில் வற்றச் செய்கிறது. அவ்விதம் அரைப்பதை "மர்தனம்" என்பர். இவ்விரு முறையும் மருந்துகளைத் திறம்படச் செயலாற்றச் செய்கின்றன.

இம்முறைகளில் அரைப்பு என்னும் அம்சம் மிகவும் முக்கியமானது. மருந்துகளின் நோய் தீர்க்கும் தரம் அரவையின் தரத்தையே பொருத்திருக்கிறது. மேலும் அரவை நன்கு அமையாத மருந்துகளை உருட்டுவதும், நல்லவடிவுடைய மாத்திரைகளாக்குவதும் மிகவும் சிரமம்,

ஆகையால் கஷாயம், சாறு, பால், மூத்திரவகைகள் போன்ற திரவங்களைக் கொண்டு குறிப்பிட்டுள்ளபடி நன்கு அரைக்க வேண்டும். இவைகளைச் சிறிய அளவில் முறைப்படி அவ்வப்போது தயாரித்துக் கொள்ள வேண்டும்.

குறிப்பிட்டகஷாயவகைகளில் சுத்தி செய்த குக்குலுவை நன்கு கரைத்துக் கொதிக்க வைத்து கெட்டிப் பாகு செய்து அத்துடன் பொடித்துச் சலித்த சூரணவகைகளைச் சேர்த்து மாத்திரையாக உருட்டியும் குக்குலு சேரும் மருந்துகளைத் தயாரிக்கலாம்.

சரியான பதத்தில் விரல்களில் சிறிது நெய் தடவிக் கொண்டு உருட்ட வேண்டியவைகளை உருட்டியும், பொடிக்க வேண்டியவைகளைப் பொடித்துச் சலித்தும் வில்லைகளாக்க வேண்டியவைகளை முறைப்படியந்திர உதவியால் வில்லைகளாக்கியும் தயாரிக்க வேண்டும்.

மாத்திரை உருட்ட அதற்கெனத் தயாரிக்கப் பட்ட யந்திரத்தை உபயோகிப்பது சிக்கனமானது. மாத்திரைகள் சீராக அமைவதுடன் குறுகிய காலத்தில் மிகுந்த அளவு மாத்திரைகளைச் செய்ய முடிகிறது.

வாசனைச் சரக்குகளான கஸ்தூரி, பச்சைக் கற்பூரம், புனுகு முதலியவைகளை மாத்திரைகளாக உருட்டும் தருணத்திலேயே சேர்க்க வேண்டும்.

பச்சைக் கற்பூரத்தைத் தனியே கல்வத்திலிட்டுப் பொடித்துச் சலித்துச் சேர்த்தரைக்க வேண்டும்.

கஸ்தூரியையும் அரைத்தே சேர்க்க வேண்டும். அதில் கிடக்கும் ரோமங்களை நீக்கி விடவும்.

புனுகைக் குப்பியுடன் சூடான தண்ணீரில் வைத்து உருக்கி மெல்லிய துணியின் வழியே பிழிந்து வடிகட்டிச் சேர்க்கவும்.

குங்குமப்பூ, அம்பர், கோரோசனை போன்றவை களைத் தனியே சாறு விட்டு அரைத்துக் கலவையுடன் சேர்த்துச் சில மணி நேரம் நன்கு தொடர்ந்து அரைக்க வேண்டும்.

மாத்திரைகளை நிழலில் உலர்த்திக் காயவைக்கவும்.

மேலும் லேகிய பாகத்தையும் கடக்க சர்க்கரை முதலியவற்றின் பாகை கொதிக்க வைத்தால் அது மேலும் இறுகுவதுடன் விரல்களால் தொட்டுப் பிரிக்க மிகுந்த எதிர் விசையால் சிறிது தடுக்கப்பட்டு தாமதித்தே விரல்கள் பிரியும். பாகு பிசுபிசுப்புத் தன்மையுடனும் தடித்தும் மிகவும் இறுகியதாகவு மிருக்கும். இந்நிலையில் சூரணம் கலந்து சிறிது ஆறிய பின்னர் அதை உருண்டையாகவோ, நீளமாகவோ, நிலை நிறுத்தலாம். மேலும் விரல்களின் ரேகைகளும், அவற்றில் பதிந்து காணப்படும்.

இதை வடக பாகம். குடிகா பாகம், மோதக பாகம், பிண்ட பாகம், குடபாகம், வர்த்தி பாகம் என்ற பெயர்களால் குறிப்பிடலாம். வாயில் அடக்கிக் கொள்ளத்தக்க வடகங்கள், மலத்வாரம், யோனி

மார்க்கம் இவைகளில் செலுத்தத்தக்க பலவர்த்திகள், இந்த பாகத்தில் தான் தயாரிக்கப் படுகின்றன.

வெல்லம். சர்க்கரை இவற்றைப் போல் சுத்தி செய்த குக்குலுவையும் முன் கூறிய திரவபதார்த்தங் களில் கொதிக்க வைத்து நன்கு கரைத்துக் கலந்து லேகியம் செய்யும் முறைப்படியே வடகங்கள், குடிகை கள் முதலியன செய்யப் படுகின்றன.

வெல்லப் பாகைக் காட்டிலும் சர்க்கரைப் பாகு சீக்கிரமாக கெட்டியாகும் குணமுள்ளதாகையால் அதைச் சற்று விசேஷமாக கவனிக்க வேண்டும்.

குறிப்பிட்ட வடகங்களும், குடிகைகளும் முன் கூறியபடி நெருப்பின் சம்பந்தமின்றியும் தயாரிக்கப் படுகின்றன. பொடித்துச் சலித்த சூரணம், பஸ்மங் கள் இவைகளைக் கல்வத்திலிட்டுக் கஷாயம், சாறு வகைகள், பன்னீர், திநீர் முதலிய திரவ பதார்த் தங்களைக் கொண்டு விரல்களில் ஒட்டாத வரை நன்கு அரைத்து உருட்டி அவை தயாரிக்கப்படுகின்றன.

## 24. ஹப் அம்பர்

| | | |
|---|---|---|
| 1. | ஜூந்த் பேதஸ்தர் | 9 கிராம் |
| 2. | கஸ்தூரி | 1 ,, |
| 3. | அம்பர் | 5 ,, |
| 4. | ஜத்வார் கதாயி | 6 ,, |
| 5. | குங்குமப்பூ | 3 ,, |
| 6. | தேன் | வேண்டிய அளவு |

ஜூந்த்பேதஸ்தரை 120 மி. லி. பன்னீரில் போட்டு வேகவைத்தரைத்து அத்துடன் கல்வத்திலிட்டு 300 மி. லி. பன்னீர் கொண்டு தனித் தனியே அரைத்த ஜத்வார்கதாயி, குங்குமப்பூ இரண்டையும் சேர்த்தரைக்கவும். போதுமான அளவுக்கு உலர்ந்த பிறகு கஸ்தூரி, அம்பர் இவற்றை சேர்த்து ஈரம் இல்லாத போது வேண்டிய அளவு தேன் சேர்த்து நன்ருக அரைத்து 50 மி.கி. அளவு மாத்திரை செய்து உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1—2 மாத்திரைகள்.

**தீரும் நோய் :** எல்லாவித அழற்சி நிலையிலும், முக்கியமாக குழந்தைகளுக்கு ஏற்படும் நிமோனியா (ஜன்னி) சுவாசக் குழாய் அழற்சி.

**குறிப்பு :** தேன் சேர்க்காமல் மாத்திரை செய்வதும் உண்டு.

## 25. ஹப் அஸ்கர்

| | | | |
|---|---|---|---|
| 1. | காபி சுத்தி செய்தது | 30 | கிராம் |
| 2. | லிங்கம் ,, ,, | 30 | ,, |
| 3. | லவங்கம் | 30 | ,, |
| 4. | ஜாதிக்காய் | 30 | ,, |
| 5. | ஜாதிபத்திரி | 30 | ,, |
| 6. | அக்ராகாரம் | 30 | ,, |
| 7. | திப்பிலி | 30 | ,, |

8. குங்குமப்பூ 15 கிராம்
9. அம்பர் 15 ,,
10. கஸ்தூரி 7.5 ,,

சுத்தி செய்த லிங்கத்தை ஒரு கல்வத்திலிட்டு 120 மி.லீ. எலுமிச்சம் பழசாறு விட்டு அரைத்து உலரவைக்கவும். பிறகு மற்ற சரக்குகளை நன்ருக பொடித்து லிங்கத்துடன் சேர்த்துக் கல்வத்திலிட்டு நன்ருக அரைத்து மாத்திரை செய்யும் பதத்திற்கு வந்ததும். 30 மி.கி. அளவு மாத்திரைகள் செய்து உலரவைத்து பத்திரப்படுத்தவும்.

**அளவு**: குழந்தைகளுக்கு 1—2 மாத்திரைகள். பெரியவர்களுக்கு 2 முதல் 4 மாத்திரை தினம் 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்**: குழந்தைகளுக்கு ஏற்படும் ஜல தோஷம், சுவாஸ நாள அழற்சி.

## 26. ஹப் அஸாராகி

1. மிளகு 6 கிராம்.
2. திப்பலி 6 ,,
3. சுத்தி செய்த எட்டிக்கொட்டை 12 ,,
4. ஓமத்திநீர் வேண்டிய அளவு

எட்டிக் கொட்டையை பசுவின் பாலில் ஊர வைத்து அதன் மேல் தோலை நீக்கி விட்டு நன்ருக

அரைக்கவும். மற்ற சரக்குகளை நன்ருகப் பொடித்து எட்டிக்கொட்டையுடன் சேர்த்து கல்வத்திலிட்டு வேண்டிய அளவு ஓமத்தீநீர் சேர்த்து அரைத்து மாத்திரை செய்யக் கூடிய பதத்திற்கு வந்ததும், 100 மி. கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு**: 1 மாத்திரை பாலுடன் 2 வேளை.

**தீரும் நோய்**: உரமாக்கி, நரம்பு உரமாக்கி, கல்லீரல் சக்தியை அதிகரிக்க, பசியை உண்டாக்க.

## 26. ஹப் அயாரிஜ்

| | | |
|---|---|---|
| 1. | ஜடாமாஞ்ஜில் | 10 கிராம் |
| 2. | லவங்கப்பட்டை | 10 ,, |
| 3. | ஊதே பல்ஸான் | 10 ,, |
| 4. | ஸலீகா | 10 ,, |
| 5. | குங்குமப்பூ | 10 ,, |
| 6. | அஸாரூன் | 10 ,, |
| 7. | மஸ்தகி | 10 ,, |
| 8. | மூசாம்பரம் | 90 ,, |

முதல் 7 சரக்குகளை நன்ருகப் பொடித்துத் தனியே கல்வத்திலிட்டு நன்ருகப் பொடித்த மூசாம்பரத்துடன் அவற்றைச் சேர்த்து, வேண்டிய அளவு தண்ணீர் கொண்டு மாத்திரை செய்யும் பதம் வரை

நன்ருக அரைத்து, 100 மி.கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1—2 மாத்திரைகள். 4 மாத்திரைகள் ஒரே தடவையில் சாப்பிட மலமிளக்கியாகும்.

**தீரும் நோய் :** தலை, மூக்கு, தொண்டைகளில் ஏற்படும் கோளாறுகள்.

## 28. ஹப் புகார்

| | | |
|---|---|---|
| 1. | குனைன் ஸல்பேட் | 10 கிராம் |
| 2. | சீந்தில் சர்க்கரை | 10 ,, |
| 3. | மூங்கிலுப்பு | 20 ,, |
| 4. | வேலம் பிசின் | 20 ,, |
| 5. | வெந்நீர் | வேண்டிய அளவு |

குனைன் ஸல்பேட் நீங்கலாக மற்ற சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொண்டு பிறகு எல்லாவற்றையும் ஒரு கல்வத்திலிட்டு வேண்டிய அளவு வெந்நீரைக் கலந்து அரைக்கவும். மாத்திரை பதத்திற்கு வந்ததும் 50 மி. கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 1—2 மாத்திரைகள்

**தீரும் நோய் :** குளிர்ஜ்வரம், யானைக்கால் ஜ்வரம்.

## 29. ஹப் டப்பா

| | | |
|---|---|---|
| 1. | சுத்தி செய்த நேர்வாளம் | 10 கிராம் |
| 2. | மூசாம்பரம் | 10 ,, |
| 3. | பாதம் பிசின் | 10 ,, |
| 4. | துத்தி இலைச்சாறு | 60 மி. லி. |

2, 3 சரக்குகளை தனித்தனியே பொடித்துக் கொண்டு சுத்தி செய்த நேர்வாளத்தை ஒரு கல்வத்தி விட்டு. துத்தி இலை சாற்றைச் சேர்த்து நன்றுக அரைத்து அத்துடன் மேற்கூறிய பொடியைச் சேர்த்து மாத்திரை உருட்டும் பதத்திற்கு வரும்வரை நன்றுக அரைத்து. 100 மி. கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு :** ½—1 மாத்திரை 1 வேளை தேனுடன் கொடுக்கவும்.

**தீரும் நோய் :** கபஜன்னி மலச்சிக்கல், அன்னத் துவேஷம், மார்சளி.

## 30. ஹப் பீல்பா

| | | |
|---|---|---|
| 1. | வெள்ளை மூக்கரட்டை வேர் | 20 கிராம் |
| 2. | ரேவல் சின்னிக்கட்டை | 40 ,, |
| 3. | கழற்சிக்காய் பருப்பு | 20 ,, |
| 4. | சுக்கு | 10 ,, |

எல்லாச் சரக்குகளையும் நன்ருகப் பொடித்துக் கொண்டு, ஒரு கல்வத்திலிட்டு, வேண்டிய அளவு துளசிச்சாற்றைச் சேர்த்து நன்ருக அரைத்து, மாத்திரை உருட்டும் பதத்திற்கு வந்ததும், 130 மி.கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப் படுத்தவும்.

**அளவு:** 2—4 மாத்திரை 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்:** ஜ்வரங்கள், முக்கியமாக யானைக் கால் ஜ்வரம்.

## 31. ஹப் ஜிரியான்

1. உலர்ந்த ஸிங்காடா கிழங்கு 100 கிராம்
2. ஆலம்பால் வேண்டிய அளவு

ஸிங்காடாவை நன்ருகப் பொடித்து ஒரு கல்வத்திலிட்டு ஆலம்பால் வேண்டிய அளவு சேர்த்து மாத்திரை உருட்டும் பதம் வரை நன்ருக அரைத்து 500 மி.கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப் படுத்தவும்.

**அளவு:** 4 மாத்திரைகள் பசுவின் பாலுடன் (நுரைப் பால்) 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** தூக்கத்தில் இந்திரியம் நழுவுதல், சீக்கிரத்தில் இந்திரியம் வெளிப்படுதல், சுக்கிர மேகம்.

## 32. ஹப் கரன்பல்

| | | | |
|---|---|---|---|
| 1. | ரஸகற்பூரம் சுத்தி செய்தது | 10 | கிராம் |
| 2. | குரோசானி ஓமம் | 10 | ,, |
| 3. | த்வக்மே கர்பஸ் | 10 | ,, |
| 4. | அனிஸூன் ஓமம் | 10 | ,, |
| 5. | ஓமம் | 10 | ,, |
| 6. | லவங்கம் | 10 | ,, |
| 7. | பனங்கற்கண்டு | 50 | ,, |

ரஸகற்பூரம் நீங்கலாக முதல் 6 சரக்குகளை நன்ருக பொடித்துக் கொள்ளவும். பனங்கற்கண்டை 240 மி. லீ. தண்ணீரில் கரைத்துக் காய்ச்சி வடிகட்டி பிறகு பாகுபதம் வரும் வரை காய்ச்சவும். ஒரு கல்வத்திலிட்டுப் பொடித்த ரஸகற்பூரத்தையும் மற்ற சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து மேற் கூறிய பாகு கொண்டு நன்ருக அரைத்து 32 மி. கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப் படுத்தவும்.

அளவு: 2—4 மாத்திரைகள், 1 நாளைக்கு 2 முதல் 3 வேளை.

தீரும் நோய்: ரத்ததோஷங்கள், சௌதாவி ஞல் ஏற்படுகிற மற்ற கோளாறுகள்.

## 33. ஹப் மதானி

| | | |
|---|---|---|
| 1. | கழற்சிக்காய் பருப்பு | 10 கிராம் |
| 2. | மிளகு | 10 ,, |
| 3. | துளசி இலைச்சாறு | வேண்டிய அளவு |

சரக்குகளை ஒரு கல்வத்திலிட்டுப் பொடித்துத் துளசி இலைச்சாற்றைச் சேர்த்து நன்ருக அரைத்து 65 மி. கி. எடையுள்ள மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

அளவு : 2—4 மாத்திரைகள் 1 நாளைக்கு 2 முதல் 3 வேளை.

தீரும் நோய் : குளிர் ஜ்வரம், யானைக்கால் ஜ்வரம், இன் புளுயன்ஸா முதலிய ஜ்வரங்கள்.

## 34. ஹப் மோம்

| | | |
|---|---|---|
| 1. | தேன் மெழுகு | 50 கிராம் |
| 2. | ஸலீகா | 50 ,, |
| 3. | ரூமி மஸ்தகி நெ. 1 | 50 ,, |

ஸலீகாவை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். மஸ்தகியை கல்வத்திலிட்டு நன்ருக அரைக்கவும். பிறகு மூன்று சரக்குகளையும் ஒன்ருகச் சேர்த்து அரைத்து 65 மி.கி. எடையுள்ள மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

அளவு. 1—2 மாத்திரைகள்.

தீரும் நோய்: மலச்சிக்கல், வறண்ட சுபாவத்தால் ஆகாரமார்க்கத்தில் ஏற்படும் வியாதிகள்.

## 35. ஹப் முர்

| | | |
|---|---|---|
| 1. | முர்மக்கி | 30 கிராம் |
| 2. | காராமணி | 50 ,, |
| 3. | ஸதாப் இலே | 20 ,, |
| 4. | புதினு | 20 ,, |
| 5. | மிஷ்க்தராமஷி | 20 ,, |
| 6. | மஞ்ஜிட்டி | 20 ,, |
| 7. | பெருங்காயம் | 20 ,, |
| 8. | ஸிக்பீன்ஜ் | 20 ,, |
| 9. | ஜாவ்ஷீர் | 20 ,, |

எல்லாச் சரக்குகளை நன்ருக பொடித்துக் கொள்ளவும். பொடித்த சரக்குகளைக் கல்வத்திலிட்டு வேண்டிய அளவு தண்ணீர் சேர்த்து நன்ருக அரைத்து 65 மி.கி. எடையுள்ள மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

அளவு: 1—2 மாத்திரைகள் 1 நாளைக்கு 2 வேளை.

தீரும் நோய்: மாதவிடாய் ஆகாத நிலை, கருப்பாசயம் செயல்படுவதில் ஏற்படும் கோளாறுகள்

## 36. ஹப் முநிர்

| | | |
|---|---|---|
| 1. | மூசாம்பரம் | 20 கிராம் |
| 2. | குங்குமப்பூ | 20 ,, |
| 3. | அன்னபேதி | 10 ,, |

மூன்று சரக்குகளையும் கல்வத்திலிட்டு வேண்டிய அளவு தண்ணீர் சேர்த்து நன்ருக அரைத்து, 65 மி. கி. எடையுள்ள மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு** : 1—2 மாத்திரைகள் 1 நாளைக்கு 3 வேளை.

**தீரும் நோய்** : மாதவிடாயை ஒழுங்குபடுத்த. மாத விடாய் இருக்கும் போது உபயோகிக்கக் கூடாது.

## 37. ஹப் ரஸ்வத்

| | | |
|---|---|---|
| 1. | ரஸ்வத் | 10 கிராம் |
| 2. | குக்குலு—சுத்தி செய்தது | 10 ,, |
| 3. | காவிக்கல் | 10 ,, |
| 4. | வேப்பங்கொட்டை | 10 ,, |
| 5. | மலைவேப்பங் கொட்டை பருப்பு | 10 ,, |
| 6. | துக்மே கந்தாரு | 10 ,, |

பொடிக்கத் தகுந்த சரக்குகளைப் பொடித்து எல்லா சரக்குகளையும் ஒரு கல்வத்திலிட்டு வேண்டிய அளவு தண்ணீர் சேர்த்தரைத்து மாத்திரை உருட்டத் தகுந்த பதத்தில் 65 மி. கி. எடையுள்ள மாத்திரை களாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு**: 2 மாத்திரைகள் தண்ணீருடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்**: மூல வியாதிகள்.

## 38. ஹப் ஸுரிஞ்ஜான்

| | | |
|---|---|---|
| 1. | மூசாம்பரம் | 10 கிராம் |
| 2. | சூரத்துகடுக்காய் தோல் | 10 ,, |
| 3. | ஸுரிஞ்ஜான் ஷீரின் | 10 ,, |

மூன்று சரக்குகளையும் தனித்தனியே நன்ருகப் பொடித்து ஒரு கல்வத்திலிட்டு. வேண்டிய அளவு தண்ணீரைச் சேர்த்து நன்ருக அரைத்து 65 மி.கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப் படுத்தவும்.

**அளவு**: 2 மாத்திரைகள் பாலுடன் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்**: மூட்டுவலி, கீல்வாயு முதலிய வைகள்.

## 39. ஹப் ஸோஸக்

| | | |
|---|---|---|
| 1. | மூங்கிலுப்பு | 20 கிராம் |
| 2. | காவிக்கல் | 15 ,, |
| 3. | வெடியுப்பு | 7.5 ,, |
| 4. | ஸங்கே-ஜராஹத் | 7.5 ,, |
| 5. | கஹ்ருபா | 7.5 ,, |
| 6. | ஏலரிசி | 7.5 கிராம் |
| 7. | ஹஜருல் யஹூத் | 7.5 ,, |
| 8. | வேலம்பிசின் | 6 ,, |
| 9. | பரங்கி சாம்பிராணி | 5 ,, |
| 10. | கடல் நுரை | 5 ,, |
| 11. | சந்தன எண்ணெய் | 25 ,, |

முதல் 10 சரக்குகளை நன்ருகத் தனித்தனியே பொடித்துக் கல்வத்திலிட்டு வேண்டிய அளவு தண்ணீரைச் சேர்த்து நன்ருக அறைத்து உலர்ந்த பின் சந்தன எண்ணெயைச் சேர்த்து நன்ருகக் கலந்து, அரைத்து, 65 மி.கி. எடையுள்ள மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 1—2 மாத்திரைகள் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்:** முற்றிய சிழ்மேகம் (வெள்ளை) விட்டு விட்டு ஏற்படும் நாள அடைப்பு.

## 40. ஹப் தங்கர்

| | | |
|---|---|---|
| 1. | வெங்காரம் | 20 கிராம் |
| 2. | குரோசானி ஓமம் | 25 „ |
| 3. | மிளகு | 120 „ |
| 4. | மூசாம்பரம் | 160 „ |
| 5. | சோற்றுக்கற்றாழை | போதுமான அளவு |

வெங்காரத்தை அதிலிருக்கும் தண்ணீரெல்லாம் வற்றும் வரை வறுக்கவும். நெ. 2, 3 சரக்குகளையும் மூசாம்பரத்தையும் தனியாகப் பொடிக்கவும். பிறகு எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து ஒரு கல்வத்தி லிட்டு, சோற்றுக்கற்றாழையின் உட்பாகத்திலிருக்கும் மிருதுவான பாகத்தைச் சேர்த்து நன்றாக அரைத்து, 65 மி. கி. எடையுள்ள மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 1—2 மாத்திரைகள் பாலுடன் 1 நாளைக்கு 3 வேளை.

**தீரும் நோய் :** சூதகவலி, மற்றும்பல சூதகக் கோளாறுகள்.

## 41. ஹப் வாஜுர் ரேஹம்

| | | |
|---|---|---|
| 1. | நொச்சி இலை | 30 கிராம் |
| 2. | தோல் உரித்த பூண்டு | 20 „ |
| 3. | மிளகு | 7 „ |

எல்லாவற்றையும் உரலில் போட்டு நன்ருக அரைத்து, 325 மி. கி. மாத்திரைகளாக உருட்டி உலர்த்தி பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 2—4 மாத்திரைகள் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்:** சூதகவலி.

## கிவம்-பாகம் எடுக்கும் முறை

யுனனி வைத்திய மொழியில் "கிவம்" என்ருல் பாகம் எனப்பொருள். கற்கண்டு, சர்க்கரை, தேன் இவைகளைக் கொண்டு பாகு தயாரிக்கப்படுகின்றது. மேற் கூறிய கலவைகளைச் சூடாக்கிக் குறுக்கும் போது கலவைகளின் தடிப்பால் ஏற்படும் மாறுபாடுகளைக் கொண்டு இவைகள் சர்பத் ஸிகஞ்ஜபீன், மாஜூன், ஜவாரிஷ், இதரிபல், லவூக், முரப்பா எனப் பலவிதப் படுகின்றன.

## இவற்றைத் தயாரிக்கப் பொது விதிகள்

கஷாயம் போன்ற திரவபதார்த்தங்களைக் கொதிக்க வைத்துத் தண்ணீரின் பகுதியை ஓரளவு வற்ற வைத்தால் அக்கலவை தடித்துப் பிசுபிசுப்

புள்ளதாக ஆகிறது. பூரணமாகத் தண்ணீர் வற்றும் போது அவை கெட்டியான பொருளாகவே மாறுகின்றன. ரஸவத் என்ற பொருளை இங்கு உதாரணமாகக் கொள்ளலாம்.

பெரும் பாலும் முறைப்படிசரக்குகளை நன்கு வேக விட்டுப்பிழிந்தெடுத்துத் தயாரித்த கஷாயத்தை வடிகட்டிய பின்னர் மேலும் வற்றவைத்துத் தடித்துக் கறுத்த சாந்து போல் பிசுபிசுப்புத் தட்டிய வுடன் எடுத்தோ அல்லது அச்சமயம் குறிப்பிட்ட சரக்குகளைப் பொடித்துச் சலித்துச் சேர்த்துக் கிளறியோ இவை தயாரிக்கப்படுகின்றன.

கற்கண்டு, சர்க்கரை, வெல்லம், நாட்டுச் சர்க்கரை, பனை வெல்லம் முதலிய இனிப்புச் சரக்கு களைக் கஷாயம், சாறு வகைகள் அல்லது தண்ணீர் இவற்றுடன் கலந்து நன்கு அரைத்து வடிகட்டிக் கொதிக்க வைத்துக் குறிப்பிட்ட அளவு வரை அக் கலவைகளைத் தடிக்கச் செய்து பானகங்களும் அவ் விதமே மேலும் சிறிது தடிக்கச் செய்த பின்னர் அதில் நெய், பொடித்துச்சலித்த மேம்பொடிகள் முதலியவற்றையும் சேர்த்து ஒன்று பட நன்கு கலந்து ஆறிய பின்னர் தேனையும் சேர்த்து லேகியங்களும் தயாரிக்கப்படுகின்றன.

லேகியங்களில் சேர்க்கப்படும் மேம்பொடிகளின் அளவிற்கேற்ப சில கெட்டியாகவும், சில நெகிழ்தலா கவும் அமைகின்றன. இதில் சேர்க்கப்படும் சூரணம்

80 செ. சல்லடைகளைக் கொண்டு சலிக்கப்பட்டோ, வஸ்திரகாளனம் செய்யப்பட்டோ இருத்தல் வேண்டும்.

சர்க்கரை முதலியவைகளை திரவ பதார்த்தங் களில் நன்கு கரைத்து வடிகட்டி பின்னர் அத் துடன் முரப்பாக்கள், நெல்லிக்காய் விழுது, கடுக்காய் விழுது, சுக்கு முதலியவைகள் குறிப்பிட்டுள்ளபடி கலக்கப்பட வேண்டும். கட்டி முதலியவைகள் நன்கு கரைந்து சீரான திரவமாக ஆனபின்னர் கலவைகளைக் கொதிக்க வைக்கும் போது ஓரங்களில் பிடித்தல் கட்டி தட்டுதல் முதலியவைகளை அவ்வப் போதே கிளறுவதன் மூலம் தவிர்க்க வேண்டும்.

கலவைகள் கொதித்து அவற்றிலுள்ள தண் ணீர்ப் பகுதி ஆவியாகமாறிக் குறையும் போது கலவையின் தடிப்பும் அதிகரிக்கிறது. முற்றிலும் தண்ணீரின் பகுதி வற்றும் பொழுது சர்க்கரை முதலியன கெட்டியாகவோ, கறுகவோ ஏதுவாகிறது. அவ்விதம் ஆகவிடாமல் குறிப்பிட்ட அளவிலேயே அக் கலவைகளின் தடிப்பை நிலை நிறுத்தி நெய் முதலியவற்றைச் சேர்க்க வேண்டும்.

பானக பாகத்தையும் கடக்கப் பாகைக் கொதிக்க வைத்தோமானுல் மேலும் ஓரளவிக்குக் குறுகிய பாகு துடுப்பு முதலியவைகளால் தூக்கி ஊற்றப் படும் போது கடைசித்துளி கூட மெல்லிய நூலால் இணைக் கப் பெற்றதுபோல் ஓர் தொடர்ச்சியுள்ளதாகவே துடுப்பில் நின்றும் கீழே விழும். அப்போது விரலினுல்

அக் கலவையை சிறிது சுடா வண்ணம் தொட்டு இரு விரல்களால் அமிழ்த்திப் பிரிக்க அக் கலவை நூல் போன்று இரு விரல்களையும் பிணைத்து நிற்கும். இவ் விதம் இணைத்து நிற்கும் நூல்களின் எண்ணிக்கைக் கேற்ப ஒரு நூல் பாகு முதல் ஏழு நூல் பாகு வரை உண்டு. இது அனுபவத்தைப் பொருத்தது என்பி னும் கூறப்பட்டுள்ள குறிப்புகள் ஓரளவு வழி காட்டி யாகலாம்.

மேலும் கலவைகளின் பிசு பிசுப்பிற்கும் தடிப் பின் தரத்திற்கும் ஏற்ப விரல்கள் விரைவிலோ, தாம தித்தோபிரியும். அவ்விதம் பிரிவது அதிகமாகத் தாமதித்தோ, வெகு விரை விலோ ஏற்படாதவாறு பாகு அமைய வேண்டும். தண்ணீரை ஒரு தட்டில் நிரப்பி அதன் மத்தியில் அந் நிலையில் தடித்த பாகைச் சிறிது கரண்டியால் எடுத்துவிட அது தண்ணீரில் அமிழ்வதுடன் கரையாமலும், சிதருமலும் விழுந்த நிலையிலேயே சில காலம் நிற்கும்.

இவ்விதமான அடையாளங்களைக் கொண்டு பதத்தைத் தீர்மானம் செய்து உடனே கலவையைத் தீயிலிருந்து கீழே இறக்கி நெய். எண்ணெ, சூரணம் போன்றவைகளைச் சேர்த்து நன்கு கலந்து ஆறிய பின்னர் பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, கஸ்தூரி போன்ற வாசனைச் சரக்குகள், தேன் இவைகளையும் சேர்த்து ஒன்றுபடக் கலந்து பத்திரப்படுத்தவும். குங்குமப்பூவைச்சிறிது தண்ணீர் சேர்த்து அரைத் துப் பாகுடன் சேர்த்துக் கொதிக்கவைப்பதும் உண்டு.

# பிரிவு 4

## ஹல்வாஜாத்

### 42. ஹல்வா பைஜ் முர்க்

| | | |
|---|---|---|
| 1. | முட்டை மஞ்சள்கரு | 20 எண் |
| 2. | ஜாதிக்காய் | 20 கிராம் |
| 3. | ஜாதிப்பத்திரி | 20 ,, |
| 4. | குங்குமப்பூ | 0.800 ,, |
| 5. | கஸ்தூரி | 0.800 ,, |
| 6. | கற்கண்டு | 2.000 ,, |
| 7. | அர்க் பேத் மிஸ்க் | 0.600 மி. லி. |

20 கோழி முட்டைகளைக் கொதிக்கும் தண்ணீரில் 10 நிமிடங்கள் வரை அமிழ்த்தி வைத்து எடுத்துக் கொள்ளவும். முட்டைகள் ஆறிய பிறகு. அவற்றின் மேல் ஓடுகளையும். வெண் கருவையும் பிரித்து விட்டு மஞ்சள் கருவைமாத்திரம் எடுத்து உதிர்த்து நன்ருக பொடித்துக் கொள்ளவும்.

2, 3. 4 சரக்குகளை ஒரு கல்வத்திலிட்டு நன்ருக பொடித்துக் கொள்ளவும். கற்கண்டை அர்க்பேத் மிஸ்குடன் வேண்டிய அளவு தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்திற்கு கொண்டு வந்து அதில் பொடித்து வைத்திருக்கின்ற மஞ்சள் கருவுடன்

எல்லா சூரணங்களையும் சேர்த்து, நன்றாகக் கலக்கவும். கஸ்தூரியைத் தனியே பொடித்துச் சேர்த்துக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 12—24 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** மேனி அழகை அதிகரிக்கும், ரத்தத்தை அளவிலும், குணத்திலும் அதிகப்படுத்தும். போக சக்தியையும், அது சம்பந்தமான கிரந்திகளையும் ஊக்குவிக்கும்.

## 43. ஹல்வா காஜர்

| | | |
|---|---|---|
| 1. | மஞ்சள் முள்ளங்கி | 300 கிராம் |
| 2. | பசுவின் பால் | 900 மி.லி. |
| 3. | நெய் | 100 கிராம் |
| 4. | சர்க்கரை | 300 ,, |
| 5. | சல்கோஸா பருப்பு | 5 ,, |
| 6. | அக்ரோட் பருப்பு | 5 ,, |
| 7. | பிண்டக் பருப்பு | 5 ,, |
| 8. | இனிப்பு பாதம் பருப்பு | 5 ,, |
| 9. | கொப்பரை | 5 ,, |
| 10. | பிஸ்தா பருப்பு | 5 ,, |
| 11. | சாரப் பருப்பு | 5 ,, |

மஞ்சள் முள்ளங்கியைக் கழுவி சுத்தம் செய்து, சிறு துண்டுகளாக வெட்டி, பசுவின் பால் சேர்த்து, மிருதுவாக வேகும் வரை காய்ச்சவும். 5 முதல் 11 வரையிலுள்ள சரக்குகளையும், முள்ளங்கியையும்

சேர்த்து நன்கு அரைக்கவும். சர்க்கரையை வேண்டிய அளவு தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்திற்குக் கொண்டுவரவும். பிறகு முள்ளங்கியையும், மற்ற சரக்குகளையும் பாகத்தில் சேர்த்துச் சிறு தீயில் தண்ணீரெல்லாம் வற்றும் வரை இருக்கச் செய்து, பிறகு நெய் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 12—24 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** சூடான சுபாவமுள்ளவர்களுக்கு போக சக்தியை அதிகமாகத் தூண்டும். இந்திரியத்தை அதிகரிக்கவும், அதன் சம்பந்தப்பட்டக் கிரந்திகளை ஊக்குவிக்கவும் செய்யும்.

## 44. ஹல்வா ஸாலப்

| | | |
|---|---|---|
| 1. | கடலைமாவு | 132 கிராம் |
| 2. | கோதுமை மாவு | 90 ,, |
| 3. | காராமணி மாவு | 90 ,, |
| 4. | நெய் | போதுமான அளவு |
| 5. | தேன் | 132 கிராம் |
| 6. | கற்கண்டு | 264 ,, |
| 7. | அர்க் பேத் மிஸ்க் | 250 மி. லி. |
| 8. | ஸாலாப் மிஸ்ரி | 31.500 கிராம் |
| 9. | பிஸ்தா பருப்பு | 9 ,, |
| 10. | பிண்டக் பருப்பு | 9 ,, |

| | | | |
|---|---|---|---|
| 11. | சல்கோஸா பருப்பு | 9 | கிராம் |
| 12. | கொப்பரை | 9 | ,, |
| 13. | அஞ்ஜகேக் | 9 | ,, |
| 14. | சாரப்பருப்பு | 9 | ,, |
| 15. | ஹப்பத்துல்கிஸ்ரா பருப்பு | 9 | ,, |
| 16. | பாதம் பருப்பு | 9 | ,, |
| 17. | ஹப்புஸாலம் பருப்பு | 9 | ,, |
| 18. | வெள்ளரிவிதை பருப்பு | 9 | ,, |
| 19. | முடக்கொத்தான் விதை | 9 | ,, |
| 20. | லவங்கப் பட்டை | 4.500 | ,, |
| 21. | ரூமி மஸ்தகி நெ. 1 | 4.500 | ,, |
| 22. | சிற்றரத்தை | 4.500 | ,, |
| 23. | பஹ்மன் ஸுர்க் | 4.500 | ,, |
| 24. | பஹ்மன் ஸுபீத் | 4.500 | ,, |
| 25. | ஷகாகுல் மிஸ்ரி | 4.500 | ,, |
| 56. | ஏலரிசி | 4.500 | ,, |
| 27. | ஜாதிக்காய் | 2.250 | ,, |
| 28. | சுக்கு | 2.250 | ,, |
| 29. | ஜாதிப்பத்திரி | 2.250 | ,, |
| 30. | குங்குமப்பூ | 2.250 | ,, |
| 31. | கஸ்தூரி | 2.250 | ,, |
| 32. | அம்பர் | 2.250 | ,, |

முதல் 3 மாவுகளை நெய்யில் வறுத்துக் கொள்ளவும். தேன், கற்கண்டு, அர்க் பேத் மிஸ்க் இவைகளை

ஒன்று கலந்து குங்குமப்பூவை சிறிது தண்ணீர் சேர்த்து நன்கு அறைத்து அத்துடன் கலந்து கொதிக்க வைத்து பாகத்தில் அம்பர், கஸ்தூரி நீங்கலாக மற்ற சரக்குகளின் நுண்ணிய சூரணத்தை சேர்த்து ஆறிய பின் கஸ்தூரி, அம்பர் இவற்றைப் பொடித்து கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** *12—24* கிராம் *1* நாளைக்கு *2* வேளை.

**தீரும் நோய் :** தாது புஷ்டிக்கு, போக சக்திக்கு இடைஞ்சலாக ஏற்படும் கோளாறுகள், இந்திரியம் சீக்கிரம் நழுவுதல், பெண்களுக்கு ஏற்படும் வெள்ளை.

# பிரிவு—5

## இத்ரிபலாத்

### 45. இத்ரிபல் அப்திமூன் முஷில்

| | | |
|---|---|---|
| 1. | இந்துப்பு | 7 கிராம் |
| 2. | அப்திமூன் | 17 ,, |
| 3. | காரிகூன் | 17 ,, |
| 4. | கௌஜபான் | 17 ,, |
| 5. | பாதரன்ஜ் போயா | 17 ,, |
| 6. | ரோஜா மொக்கு | 17 ,, |
| 7. | காபூல் கடுக்காய்த்தோல் | 25 ,, |

| | | | |
|---|---|---|---|
| 8. | சூரத் கடுக்காய்த் தோல் | 25 | கிராம் |
| 9. | பிஞ்சுக் கடுக்காய் | 25 | ,, |
| 10. | தான்றிக்காய்த் தோல் | 25 | ,, |
| 11. | நெல்லிக்காய் | 25 | ,, |
| 12. | பிஸ்பாயேஜ் | 25 | ,, |
| 13. | சிவதை—வெள்ளை | 25 | ,, |
| 14. | தேன் | 800 | ,, |

முதல் 13 சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். தேனைச் சிறிதளவு தண்ணீருடன் கலந்து காய்ச்சிப் பாகு பதத்திற்குக் கொண்டு வரவும். பிறகு எல்லா சூரணங்களையும் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு**: 6—12 கிராம். 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்**: மூளையில் சேர்ந்திருக்கும் வாதம் பித்தம், கபம் ஆகிய முத்தோஷங்களை பேதி மூலம் களைய, நரம்புகளை ஊக்குவிக்க, ரத்தத்தை சுத்தி செய்ய.

சர்க்கரை உபயோகிப்பதும் உண்டு.

## 46. இத்ரிபல் அப்திமூன்

| | | | |
|---|---|---|---|
| 1. | அப்திமூன் | 80 | கிராம் |
| 2. | காபூல் கடுக்காய்த்தோல் | 20 | ,, |
| 3. | தான்றிக்காய்த் தோல் | 20 | ,, |
| 4. | நெல்லிக்காய் | 20 | ,, |

| | | |
|---|---|---|
| 5. | சிவதை—வெள்ளை | 20 கிராம் |
| 6. | நிலாவாரை | 10 ,, |
| 7. | சித்ரமூலம் | 5 ,, |
| 8. | பிஸ்பாயேஜ் | 2.5 ,, |
| 9. | அனிசூன் ஓமம் | 5 ,, |
| 10. | இந்துப்பு | 5 ,, |
| 11. | தேன் | 330 . |

முதல் 9 சரக்குகளை நன்ருக பொடித்துக் கொள்ளவும். இந்துப்பைத் தனியாக அரைத்து வைக்கவும். தேனுடன் வேண்டிய அளவு தண்ணீர் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்திற்குக் கொண்டு வரவும். பாகத்தில் எல்லா சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருக கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** வாதத்தின் காரணமாகக் கோளாறு அடைந்த ரத்தத்தை சுத்தி செய்ய.

சர்க்கரை உபயோகிப்பதும் உண்டு.

## 47. இத்ரிபல் குடநி

| | | |
|---|---|---|
| 1. | பிஞ்சுக்கடுக்காய் | 60 கிராம் |
| 2. | அப்திமூன் | 40 ,, |
| 3. | தான்றிக்காய்த் தோல் | 30 ,, |

| | | |
|---|---|---|
| 4. | நெல்லிக்காய் | 30 கிராம் |
| 5. | சிவதை வெள்ளை | 30 ,, |
| 6. | பிஸ்பாயேஜ் | 20 ,, |
| 7. | உஸ்தகுத்தூஸ் | 20 ,, |
| 8. | நிலாவாரை | 20 ,, |
| 9. | செம்மரி ஆட்டின் கழுத்தின் எலும்பிலுள்ள ஜவ்வு | 12 கிராம் |
| 10. | காரிகூன் | 12 ,, |
| 11. | கிச்சிலிக் கிழங்கு | 12 ,, |
| 12. | சித்ரமூலம் | 12 ,, |
| 13. | நவாசாரம் | 12 , |
| 14. | மஸ்தகி நெ. 1 | 8 ,, |
| 15. | அனிசூன் ஓமம் | 8 ,, |
| 16. | குர்பாவிதை | 8 ,, |
| 17. | ஜடாமாஞ்சில் | 8 ,, |
| 18. | லவங்கம் | 8 ,, |
| 19. | ஜாதிக்காய் | 8 ,, |
| 20. | ஏலக்காய் | 8 ,, |
| 21. | தேன் | 1200 ,, |

ஆட்டெலும்பின் ஜவ்வைச் சிறுதுண்டுகளாக வெட்டி உலர வைத்து முதல் 19 சரக்குகளை நன்றாக பொடித்துக் கொள்ளவும். தேனுடன் சிறிதளவு தண்ணீர் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் சூரணங்களைச் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்:** தொண்டையிலுள்ள சதை. கிரந்திகள் இவைகளின் அழற்சி, மற்றும் பல தொண்டையைப் பற்றியக் கோளாறுகள்.

## 58. இத்ரிபல் கபீர்

| | | | |
|---|---|---|---|
| 1. | பிஞ்சுக் கடுக்காய் | 15 | கிராம் |
| 2. | காபூல் கடுக்காய்த் தோல் | 15 | ,, |
| 3. | தான்றிக்காய்த் தோல் | 15 | ,, |
| 4. | நெல்லிக்காய் | 15 | ,, |
| 5. | மிளகு | 15 | ,, |
| 6. | திப்பிலி | 15 | ,, |
| 7. | சுக்கு | 7.5 | ,, |
| 8. | ஜாதிப்பத்திரி | 7.5 | ,, |
| 9. | பூஜிதான் | 7.5 | ,, |
| 10. | ஷகாகுல்மிஸ்ரி | 7.5 | ,, |
| 11. | தோதரி-ஸுர்க் | 7.5 | ,, |
| 12. | தோதரி—ஜர்த் | 7.5 | ,, |
| 13. | இனிப்புவெட்பாலை அரிசி | 7.5 | ,, |
| 14. | சித்ரமூலம் | 7.5 | ,, |
| 15. | பஹ்மன்ஸுர்க் | 7.5 | ,, |
| 16. | பஹ்மன்ஸுபீத் | 7.5 | ,, |
| 17. | முடக்கொத்தான் விதை | 7.5 | ,, |

| | | | |
|---|---|---|---|
| 18. | எள்ளு | 7.5 | கிராம் |
| 19. | கசகசா | 7.5 | ,, |
| 20. | துரஞ்ஜபீன் | 100 | ,, |
| 21. | தேன் | 600 | ,, |
| 22. | பாதாம் எண்ணெ or நெய் | 20 | ,, |

முதல் 16 சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். 17 முதல் 19 வரையிலுள்ள சரக்குகளைச் சிறிது தண்ணீருடன் கல்வத்திலிட்டு நன்ருக அரைத்துத் தேனுடனும் துரன்ஜபீன் கஷாயத்துடனும் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் மற்ற சூரணங்களைச் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் படுக்கப் போகும் போது மட்டும்.

**தீரும் நோய் :** பார்வையைக் கூர்மையாக்க, கபத்திஞல் ஏற்படும் மூளை, ஜீரணம், நரம்பு சம்பந்தமான கோளாறுகள்.

## 59. இத்ரிபல் கிஷ்னிஸ்

| | | | |
|---|---|---|---|
| 1. | காபூல் கடுக்காய்த் தோல் | 20 | கிராம் |
| 2. | சூரத் கடுக்காய்த் தோல் | 20 | ,, |
| 3. | பிஞ்சுக் கடுக்காய் | 20 | ,, |
| 4. | தான்றிக்காய்த் தோல் | 20 | ,, |
| 5. | நெல்லிக்காய் | 20 | ,, |

| | | |
|---|---|---|
| 6. | தனியா | 20 கிராம் |
| 7. | நெய் | 50 ,, |
| 8. | தேன் | 360 ,, |

3, 4 சரக்குகளை நெய்யில் வறுத்து நன்றாக பொடித்துக் கொள்ளவும் மற்ற சரக்குகளையும் உரலிலிட்டு இடித்து சூரணம் செய்து கொள்ளவும். தேனுடன் சிறிது தண்ணீர் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் சூரணங்களைச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** நாட்பட்ட தலைவலி, காதுவலி, முற்றிய வெள்ளை, சுக்கிர மேகம், இந்திரியம் சீக்கிரம் நழுவுதல் நரம்புகளைப் பற்றிய உஷ்ணம்.

## 60. இத்ரிபல் முகில்

| | | |
|---|---|---|
| 1. | காபூல் கடுக்காய்த்தோல் | 10 கிராம் |
| 2. | சூரத் ,, ,, | 10 ,, |
| 3. | தான்றிக்காய்த்தோல் | 10 ,, |
| 4. | நெல்லிக்காய் | 10 ,, |
| 5. | குக்குலு சுத்தி செய்தது | 30 ,, |
| 6. | அங்கூர் திராக்ஷை | 40 ,, |
| 7. | தேன் | 450 ,, |
| 8. | பாதம் எண்ணை or நெய் | 20 ,, |

முதல் 4 சரக்குகளை நன்றாகப் பொடித்துக் கொள்ளவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் குக்குலுவையும், அங்கூர் திராக்ஷையும் சிறிது பாகத்தைச் சேர்த்துக் கல்வத்திலிட்டு நன்றாக அரைத்துச் சேர்த்துக் காய்ச் சிப் பதத்தில் மற்ற சூரணங்களை சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

அளவு : 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** ரத்த மூலம், மற்ற குடல் சம்பந்த மான அழற்சி நிலைகள்.

## 61. இத்ரிபல் முலய்யின்

| | | | |
|---|---|---|---|
| 1. | காபூல் கடுக்காய்த் தோல் | 20 | கிராம் |
| 2. | தான்றிக்காய்த் தோல் | 20 | ,, |
| 3. | பிஞ்சுக் கடுக்காய் | 20 | ,, |
| 4. | நெல்லிக்காய் | 20 | ,, |
| 5. | சிவதை வெள்ளை | 20 | ,, |
| 6. | ரேவல் சீனிக்கட்டை | 50 | ,, |
| 7. | சோம்பு | 50 | ,, |
| 8. | மஸ்தகி நெ. 1 | 50 | ,, |
| 9. | உஸ்தகுத்தூஸ் | 50 | ,, |
| 10. | ஸக்மூனியா | 100 | ,, |
| 11. | தேன் | 1200 | ,, |
| 12. | நெய் | 50 | ,, |

முதல் 10 சரக்குகளையும் நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். அவற்றுள் நெ. 8, 10 சரக்குகளைக் கல்வத்தில் மெதுவாக தனித்தனியே அரைத்துக் கொள்ளவும். தேனுடன் சிறிதளவு தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சி பாகு பதத்தில் மற்ற சூரணங்களை சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு**: 6—12 கிராம் பாலுடன் படுக்கும் போது சாப்பிடவும்.

**தீரும்நோய்**. நாட்பட்ட தலைவலி, மலபந்தம், கபத்திஞல் ஏற்படும் நரம்பு வியாதிகள்.

## 62. இத்ரிபல் ரஸ்யஞஜ் மக்ஸ் பாதம்வாலா

| | | |
|---|---|---|
| 1. | சூரத் கடுக்காய்த் தோல் | 10 கிராம் |
| 2. | காபூல் கடுக்காய்த் தோல் | 10 ,, |
| 3. | தான்றிக்காய்த் தோல் | 10 ,, |
| 4. | நெல்லிக்காய் | 10 ,, |
| 5. | தனியா | 10 ,, |
| 6. | ரோஜா மொக்கு | 10 ,, |
| 7. | ஸாதர் பாஸி | 10 ,, |
| 8. | பாதம் பருப்பு | 40 ,, |
| 9. | சோம்பு | 60 ,, |
| 10. | தேன் | 500 ,, |

முதல் 7 சரக்குகளையும் சோம்பையும் நன்றாகப் பொடித்துக் கொள்ளவும். பாதம் பருப்பைக் கல்வத்தி லிட்டு நன்றாக அரைத்துத் தேனுடன் சிறிது தண்ணீ ரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகத்தில் எல்லாச் சூரணங் களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** நாட்பட்ட தலைவலி, நரம்புத் தளர்ச்சி, பொதுவாக கபத்தினால் ஏற்படும் வியாதி கள்.

## 63. இத்ரிபல் ஷகீர்

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரத் கடுக்காய்த் தோல் | 30 | கிராம் |
| 2. | தான்றிக்காய்த் தோல் | 30 | ,, |
| 3. | பிஞ்சுக் கடுக்காய் | 30 | ,, |
| 4. | காபூல் கடுக்காய்த் தோல் | 30 | ,, |
| 5. | நெல்லிக்காய் | 30 | ,, |
| 6. | நெய் | 50 | ,, |
| 7. | தேன் | 450 | ,, |

பிஞ்சுக் கடுக்காயை நெய்யில் சிவப்பாக வறுத்து, சூடாக இருக்கும்போதே பொடித்துக் கொள்ளவும். மற்ற சரக்குகளையும் நன்றாகப் பொடித்துக் கொள்ள வும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் மற்ற சூரணங்களைச் சிறிது

சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு:** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** மூலம், ஞாபகசக்திக் குறைவு, நரம்புத்தளர்ச்சி.

## 64. இத்ரிபல் ஷாத்ரா

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரத் கடுக்காய்த்தோல் | 140 | கிராம் |
| 2. | தான்றிக்காய்த்தோல் | 70 | ,, |
| 3. | நெல்லிக்காய் | 70 | ,, |
| 4. | காபூல் கடுக்காய்த்தோல் | 108 | ,, |
| 5. | நிலாவரை | 35 | ,, |
| 6. | ரோஜா மொக்கு | 21 | ,, |
| 7. | ஷாத்ரா | 175 | ,, |
| 8. | விரை இல்லா திராக்ஷை | 90 | ,, |
| 9. | தேன் | 2127 | ,, |
| 10. | பாதாம் எண்ணை அல்லது நெய் | 50 | ,, |

முதல் 4 சரக்குகளை பாதாம் எண்ணையிலோ நெய்யிலோ வருத்து அடுத்த 3 சரக்குகளையும் சேர்த்து நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். திராக்ஷையை ஒரு கல்வத்திலிட்டு நன்ருக அறைத்துக் கொள்ளவும். தேனுடன் சிறிது தண்ணீரையும், அறைத்த திராக்ஷையையும் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில்

மற்ற சூரணங்களைச் சேர்த்து நன்றாகக் கலந்துப் பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** ரத்தத்திலுள்ள கோளாறுகள், சருமத்தில் ஏற்படும் கோளாறுகள், வாதத்தினால் ஏற்படும் மூளைக் கோளாறுகள்.

## 65. இத்ரிபல் ஸநா

| | | |
|---|---|---|
| 1. | காபூல் கடுக்காய்த் தோல் | 15 கிராம் |
| 2. | தான்றிக்காய்த் தோல் | 15 ,, |
| 3. | நெல்லிக்காய் | 15 ,, |
| 4. | நிலாவாரை | 15 ,, |
| 5. | பசுவின் நெய் | 10 ,, |
| 6. | தேன் | 150 ,, |

முதல் 4 சரக்குகளை நன்றாகப் பொடித்து நெய்யை உருக்கி அந்தச் சூரணத்தில் கலந்து வைக்கவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் சூரணத்தைச் சிறிது. சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து வைக்கவும்.

**அளவு :** 6—12 கிராம் படுக்கும் போது.

**தீரும் நோய் :** மலமிளக்கி.

## 66. இத்ரிபல் உஸ்து குத்தூஸ்

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரத்துக் கடுக்காய்த் தோல் | 10 | கிராம் |
| 2. | பிஞ்சுக் கடுக்காய் | 10 | ,, |
| 3. | காபூல் கடுக்காய்த் தோல் | 10 | ,, |
| 4. | நெல்லிக்காய் | 10 | ,, |
| 5. | தான்றிக்காய்த் தோல் | 10 | ,, |
| 6. | சதாப் இலை | 10 | ,, |
| 7. | சிவதை வெள்ளை | 10 | ,, |
| 8. | பிஸ்பாயேஜ் | 10 | ,, |
| 9. | உஸ்தகுத்தூஸ் | 10 | ,, |
| 10. | நிலாவாரை | 10 | ,, |
| 11. | மஸ்தகி நெ. 1 | 10 | ,, |
| 12. | அப்திமூன் | 10 | ,, |
| 13. | அங்கூர் திராக்ஷை | 10 | ,, |
| 14. | கிஸ்மிஸ் திராக்ஷை | 10 | ,, |
| 15. | பாதம் எண்ணெய் அல்லது நெய் | 25 | ,, |
| 16. | தேன் | 420 | ,, |

பிஞ்சுக் கடுக்காயை பாதம் எண்ணெயிலோ நெய்யிலோ வறுத்து, முதல் 10 சரக்குகளையும், அப்திமூனையும் நன்றாகப் பொடித்துக் கொள்ளவும். மஸ்தகியைக் கல்வத்திலிட்டு மெதுவாக அரைக்கவும். திராக்ஷையைக் கல்வத்தில் நன்றாக மெழுகு பதத்தில் அரைத்து தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சியபாகுடன் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில்

எல்லாச் சூரணங்களையும் சிறிது, சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** நாட்பட்ட தலைவலி, ரத்தத்தின் கோளாறுகளால் ஏற்படும் மன நோய்கள், தலையில் உண்டாகும் சீதளம், வயிற்றில் ஏற்படும் கோளாறு களால் உண்டாகும் மார்வலி, கபத்தினுல் ஏற்படும் கோளாறுகள், தொடர்ந்து உபயோகிக்க நரையை மாற்றும்.

## 67. இத்ரிபல் ஜமானி

| | | | |
|---|---|---|---|
| 1. | காபூல் கடுக்காய்த் தோல் | 10 | கிராம் |
| 2. | பிஞ்சுக் கடுக்காய் | 10 | ,, |
| 3. | சூரத்துக் கடுக்காய்த் தோல் | 10 | ,, |
| 4. | சிவதை வெள்ளை | 20 | ,, |
| 5. | தனியா | 20 | ,, |
| 6. | தான்றிக்காய்த் தோல் | 5 | ,, |
| 7. | நெல்லிக்காய் | 5 | ,, |
| 8. | ரோஜா மொக்கு | 5 | ,, |
| 9. | மூங்கிலுப்பு | 5 | ,, |
| 10. | தாமரைப் பூ | 5 | ,, |
| 11. | வெள்ளைச் சந்தனம் | 2.5 | ,, |
| 12. | பாதம் பிசின் | 2.5 | ,, |
| 13. | பாதம் எண்ணெய் அல்லது நெய் | 30 | ,, |

| | | |
|---|---|---|
| 14. | குலே பனப்ஷா | 10 கிராம் |
| 15. | ஸக்மோனியா | 10 ,, |
| 16. | தேன் | 300 ,, |
| 17. | உன்னுப் | 25 எண்ணிக்கைகள் |
| 18. | ஸபிஸ்தான் | 25 ,, |
| 19. | குலேபனப்ஷா | 8 கிராம் |
| 20. | கடுக்காய் முரபா திரவம் | 750 ,, |

பிஞ்சுக் கடுக்காயை பாதம் எண்ணெயிலோ நெய்யிலோ வறுத்துப் பொடிக்கவும். 9, 15 சரக்குகளைத் தனித்தனியே கல்வத்தில் அரைத்து வைக்கவும். முதல் 8 சரக்குகளையும் 10, 11, 12, 14 சரக்குகளையும், நன்ருக பொடித்துக் கொள்ளவும்.

உன்னுப், ஸபிஸ்தான், குலேபனப்ஷா இவற்றை தண்ணீரில் கொதிக்க வைத்துப் பாதி வற்றியவுடன் கசக்கி வடிக்கட்டி எடுத்த கஷாயத்தில் தேன், கடுக்காய் முரபாச்சாறு ஆகியவற்றைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** மலமிளக்கி, பொதுவாக கண், மூக்கு, காது, தொண்டைகளில் அழற்சியின் விளைவால் ஏற்படும் கோளாறுகள்.

சர்க்கரை சேர்த்துத் தயாரிப்பதும் உண்டு.

# பிரிவு 6

## ஜவாரிஷாத்

ஜவாரிஷ்—பொதுவாக இவைகள் இரைப்பையிலும், குடலிலும் செயல்படுகின்றன. இவற்றில் உபயோகிக்கும் சூரணங்கள் நுண்ணியதாக இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை.

### 68. ஜவாரிஷ் அமிலா லூலுவீ

| | | | |
|---|---|---|---|
| 1. | பச்சை நெல்லிக்காய்ச்சாறு | 200 | கிராம் |
| 2. | மூங்கிலுப்பு | 10 | ,, |
| 3. | ஸமாக் | 10 | ,, |
| 4. | ஜரிஷ்க் | 10 | ,, |
| 5. | குலே கௌஜபான் | 25 | ,, |
| 6. | ரோஜா மொக்கு | 10 | ,, |
| 7. | பாதரஞ்ஜ் போயா | 10 | ,, |
| 8. | போஸ்தேபைரூன் பிஸ்தா | 10 | ,, |
| 9. | தனியா | 20 | ,, |
| 10. | பருப்புக் கீரை விதை | 20 | ,, |
| 11. | முத்து | 2.5 | ,, |

| | | |
|---|---|---|
| 12. | அம்பர் | 1.7 கிராம் |
| 13. | வெள்ளி ரேக்கு | 1.7 ,, |
| 14. | தங்க ரேக்கு | 1.7 ,, |
| 15. | பிஹீமுரபா | 150 ,, |
| 16. | சர்க்கரை | 750 ,, |

நெல்லிக்காய்ச் சாறு, ஜரிஷ்க், மூங்கிலுப்பு நீங்கலாக முதல் 10 சரக்குகளைத் தனித்து நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். மூங்கிலுப்பைத் தனித்துக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கொள்ளவும். முத்தை வேண்டிடளவு பன்னீர் சேர்த்து அரைத்து உலர வைக்கவும். சர்க்கரையை நெல்லிக்காய்ச் சாற்றில் கலந்து அத்துடன் கல்வத்தி லிட்டு நன்ருக அரைத்த 4, 15 சரக்குகளையும் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் தனித்துப் பொடித்த அம்பரையும் மற்ற சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பிறகு வெள்ளி, தங்கரேக்குகளைச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 3—6 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** கல்லீரல் உஷ்ணமாகி உண்டாகும் பேதி, ரத்தக்குறைவு, அன்னத்துவேஷம், முதலியவைகள்,

## 69. ஜவாரிஷ் அமிலா ஸாதா

| | | |
|---|---|---|
| 1. | நெல்லி வற்றல் | 500 கிராம் |
| 2. | போஸ்தேபைரூன் பிஸ்தா | 50 ,, |
| 3. | ,, துரஞ்ஜ் | 10 ,, |
| 4. | சந்தனம் வெள்ளை | 10 ,, |
| 5. | மூங்கிலுப்பு | 10 ,, |
| 6. | மஸ்தகி நெ. 1 | 5 ,, |
| 7. | பச்சை ஏலக்காய் | 5 ,, |
| 8. | கற்கண்டு | 1600 ,, |

நெல்லிவற்றல் நீங்கலாக முதல் 7 சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். நெல்லிவற்றலை 24 மணி நேரம் பாலில் ஊறவைத்துப் பிறகு அலம்பி தண்ணீரில் கொதிக்க வைத்துப் பிழிந்தெடுத்து வடி கட்டிய கஷாயத்தில் கற்கண்டை சேர்த்துக் காய்ச்சி பாகுபதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு** : 6—12 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்** : பேதி, அசீரணம், ரத்தமின்மை, மற்றும் கல்லீரலின் உஷ்ணமான நிலைகள்.

## 70. ஜவாரிஷ் அனுரைன்

| | | |
|---|---|---|
| 1. | இனிப்பு மாதுளம் பழச்சாறு | 960 மி.லி. |
| 2. | புளிப்பு மாதுளம் பழச்சாறு | 960 ,, |
| 3. | பச்சைப் புதினுச் சாறு | 98 ,, |
| 4. | பன்னீர் | 98 ,, |
| 5. | ஜடாமாஞ்சில் | 7 கிராம் |
| 6. | மஸ்தகி நெ. 1 | 7 ,, |
| 7. | துருஞ்சிக்காய்த் தோல் | 3.5 ,, |
| 8. | போஸ்த் பைரூன் பிஸ்தா | 3.5 ,, |
| 9. | சிறிய ஏலக்காய் விதை | 3.5 ,, |
| 10. | பெரிய ஏலக்காய் விதை | 3.5 ,, |
| 11. | சர்க்கரை | 960 ,, |

திரவங்கள் நீங்கலாக முதல் 10 சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். மஸ்தகியை கல்வத்திலிட்டு மெதுவாக அரைத்துக் கொள்ளவும். வடிகட்டிய சாறுகளையும் பன்னீரையும் சர்க்கரையுடன் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் சூரணங்களைச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் தினம் 2 வேளை.

**தீரும் நோய் :** உஷ்ணமான சுபாவம் உள்ளவர்களின் கல்லீரல் கோளாறுகள், இரைப்பைக் கோளாறுகள்,

## 71. ஜவாரிஷ் பிலாபலீ

| | | | |
|---|---|---|---|
| 1. | மிளகு | 70 | கிராம் |
| 2. | வெள்ளை மிளகு | 70 | ,, |
| 3. | திப்பிலி | 70 | ,, |
| 4. | சுக்கு | 3.5 | ,, |
| 5. | கரப்ஸ் | 3.5 | ,, |
| 6. | ஸலீகா | 3.5 | ,, |
| 7. | ஊதே பல்ஸான் | 3.5 | ,, |
| 8. | அஸாரூன் | 3.5 | ,, |
| 9. | துக்மே ராஸன் | 3.5 | ,, |
| 10. | கற்கண்டு | 231 | ,, |
| 11. | தேன் | 462 | ,, |

முதல் 9 சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். கற்கண்டை வேண்டிய தண்ணீரில் கரைத்துக் கொண்டு. தேனுடன் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் சூரணங்களை சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 3—6 கிராம் தினம் 2 வேளை.

**தீரும் நோய் :** வயிறும், குடலும் விரிதல், ஜீரணக் கோளாறுகள்.

## 72. ஜவாரிஷ் ஜாலினூஸ்

| | | |
|---|---|---|
| 1. | ஜடாமாஞ்சில் | 20 கிராம் |
| 2. | லவங்கம் | 20 ,, |
| 3. | ஏலக்காய் | 20 ,, |
| 4. | ஸலீகா | 20 ,, |
| 5. | லவங்கப்பட்டை | 20 ,, |
| 6. | சிற்றரத்தை | 20 ,, |
| 7. | கோரைக்கிழங்கு | 20 ,, |
| 8. | சுக்கு | 20 ,, |
| 9. | மிளகு | 20 ,, |
| 10. | திப்பிலி | 20 ,, |
| 11. | கோஷ்டம் தித்திப்பு | 20 ,, |
| 12. | உதே பல்ஸான் | 20 ,, |
| 13. | அஸாரூன் | 20 ,, |
| 14. | துக்மே-மூரத் | 20 ,, |
| 15. | நிலவேம்பு | 20 ,, |
| 16. | மஸ்தகி நெ. 1 | 50 ,, |
| 17. | குங்குமப்பூ | 20 , |
| 18. | தேன் | 740 ,, |
| 19. | சர்க்கரை | 370 ,, |

மஸ்தகியைக் கல்வத்திலிட்டு மெதுவாக அரைத்துக் கொள்ளவும். மற்ற சரக்குகளை நன்றாகப் பொடித்துக் கொள்ளவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில்

எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

அளவு: 6—12 கிராம் தினம் 2 வேளை.

**தீரும் நோய்:** ஜளிப்பு, மூக்கும், தொண்டையும் பற்றிய அழற்சிநிலைகள்.

## 73. ஜவாரிஷ் காமூனிகபீர்

| | | |
|---|---|---|
| 1. | கருஞ்சீரகம் | 54 கிராம் |
| 2. | சதாப் இலை | 12 ,, |
| 3. | வெண் மிளகு | 7 , |
| 4. | மிளகு | 7 ,, |
| 5. | லவங்கப்பட்டை | 7 ,, |
| 6. | பூரேஅர்மனி | 7 ,, |
| 7. | இஞ்சி முரபா | 60 ,, |
| 8. | கடுக்காய் முரபா | 60 ,, |
| 9. | குல்கந்து | 99 ,, |
| 10. | கற்கண்டு | 240 ,, |
| 11. | தேன் | 120 ,, |

முதல் 6 சரக்குகளை நன்றாகப் பொடித்துக் கொள்ளவும். கற்கண்டு, தேன் இவைகளுடன் வேண்டிய அளவு தண்ணீரைச் சேர்த்து அத்துடன் நன்றாக அரைத்த முரபாக்களையும், குல்கந்தையும் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் சூரணங்களைச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** அஜீரணம், பேதி, மற்றும் பித்தத்தினாலும், கபத்தினாலும் ஏற்படும் இரைப்பை, குடல் கோளாறுகள்.

## 74. ஜவாரிஷ் காமூனிஸாதா

| | | |
|---|---|---|
| 1. | கிர்மானி ஜீரகம் | 150 கிராம் |
| 2. | ஸதாப் இலை | 60 ,, |
| 3. | சுக்கு | 60 ,, |
| 4. | பூரே அர்மனீ | 60 ,, |
| 5. | மிளகு | 45 ,, |
| 6. | சர்க்கரை | 1125 ,, |

முதல் 5 சரக்குகளை நன்றாகப் பொடித்துக் கொள்ளவும். சர்க்கரையை வேண்டிய தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் சூரணங்களைச் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் தினம் 2 வேளை.

**தீரும் நோய் :** மலபந்தம், வயிற்றில் சேரும் வாயுவைக்கலைத்து ஜீரணத்தைச் சரிப்படுத்த, குடல், இரைப்பை, வியாதிகள்,

## 75. ஜவாரிஷ் மஸ்தகி ஸாதா

1. மஸ்தகி நெ. 1 — 20 கிராம்
2. பன்னீர் — 180 மி.லீ.
3. சர்க்கரை — 800 கிராம்

மஸ்தகியைக் கல்வத்திலிட்டு மெதுவாக அரைத்துக் கொள்ளவும். சர்க்கரையைப் பன்னீரில் சேர்த்துக் காய்ச்சிப் பாகம் ஆறிய பிறகு சூரணத்தைச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 3—6 கிராம் தினம் 2 வேளை.

**தீரும் நோய்** : குளுமை ஓங்கிய நிலையில் கல் லீரல், இரைப்பைகளில் ஏற்படும் வியாதி, உமிழ்நீர் பெருக்கம்.

## 76. ஜவாரிஷ் ஊதேஷீரீன்

| | | |
|---|---|---|
| 1. | அஸாரூன் | 7 கிராம் |
| 2. | குங்குமப்பூ | 7 ,, |
| 3. | அகில் கட்டை | 18 ,, |
| 4. | லவங்கப் பட்டை | 18 ,, |
| 5. | ஜாதிக்காய் | 18 ,, |
| 6. | பருப்புக் கீரை விதை | 18 ,, |
| 7. | சிறு ஏலக்காய் | 18 ,, |
| 8. | லவங்கம் | 18 ,, |
| 9. | சிற்றரத்தை | 18 ,, |

| | | |
|---|---|---|
| 10. | திப்பிலி | 18 கிராம் |
| 11. | கற்கண்டு | 240 ,, |
| 12. | தேன் | 396 ,, |

முதல் 10 சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். கற்கண்டையும், தேனையும் வேண்டிய அளவு தண்ணீருடன் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது, சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 3—6 கிராம் தினம் 2 வேளை.

**தீரும் நோய்:** சிறு மலமிளக்கி, ஜீரண உறுப்புகளுக்கு உரமேற்றி.

## 77. ஜவாரிஷ் ஊதேதுருஷ்

| | | |
|---|---|---|
| 1. | ஜடாமாஞ்சில் | 3.5 கிராம் |
| 2. | ஏலக்காய் | 3.5 ,, |
| 3. | குங்குமப்பூ | 3.5 ,, |
| 4. | துருஞ்சிக்காய்த் தோல் | 3.5 ,, |
| 5. | லவங்கம் | 3.5 ,, |
| 6. | லவங்கப்பட்டை | 3.5 ,, |
| 7. | பாதரஞ்போயா | 3.5 ,, |
| 8. | மஸ்தகி நெ. 1 | 3.5 ,, |
| 9. | மூங்கிலுப்பு | 3.5 ,, |
| 10. | அகில் கட்டை | 17.5 ,, |

11. ஆப்பிள் முரபா 225 கிராம்
12. பன்னீர் 270 ,,
13. கற்கண்டு 315 ,,
14. தேன் 315 ,,
15. எலுமிச்சம்பழச்சாறு 405 மி.லி.

மஸ்தகி, மூங்கிலுப்பு இவற்றைக் கல்வத்தில் தனித்தனியே அரைத்துக் கொள்ளவும். மற்ற சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும்.

பன்னீர், கற்கண்டு, தேன், பழச்சாறு இவற்றை ஒன்ருகச் சேர்த்துக் காய்ச்சி தேனும், கற்கண்டும் நன்ருகக் கரைந்த பிறகு வடிகட்டி அத்துடன் ஆப்பிள் முரபாவை உரலில் நன்ருக அரைத்துச் சேர்த்து மறுமுறை காய்ச்சிப் பாகுபதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 6—12 கிராம். 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** அஜீரணம், வயிற்று உப்புசம், புளித்து நுரைத்துப்போகும் பேதிகள்.

## 78. ஜவாரிஷ் ஸபர்ஜாலி முஷில்

1. சிறு ஏலக்காய் 22.5 கிராம்
2. பெரிய ஏலக்காய் 22.5 ,,
3. சிவதை வேர் 8.5 ,,

| | | |
|---|---|---|
| 4. | சுக்கு | 9.0 கிராம் |
| 5. | குங்குமப்பூ | 13.5 ,, |
| 6. | மஸ்தகி நெ. 1 | 17.5 ,, |
| 7. | ஸக்மூனியா | 17.5 ,, |
| 8. | சர்க்கரை | 240 ,, |
| 9. | தேன் | 240 ,, |
| 10. | பிஹீமுரபா | 480 ,, |
| 11. | பசுவின் நெய் | 80.0 ,, |

முதல் 5 சரக்குகளை நன்றாகப் பொடித்துக் கொள்ளவும். 6, 7. சரக்குகளைத் தனித்தனியே கல்வத்தில் அரைத்துக் கொள்ளவும். பிஹீமுரபாவையை நன்றாக அரைத்து சர்க்கரையுடனும், தேனுடனும் வேண்டிய தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிய பாகத்தில் சேர்த்து மறு முறையும் காய்ச்சிப் பாகு பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 6 கிராம் படுக்கும் சமயம்,

**தீரும் நோய் :** பெருங்குடல் அழற்சி. குளிமை ஓங்கிய நிலையில் ஏற்படும் நாள்பட்ட கல்லீரல், இரைப்பை கோளாறுகள்.

## 79. ஜவாரிஷ் ஸங்தாரு

| | | | |
|---|---|---|---|
| 1. | கோழி கல்லைக்குள்ளிருக்கும் தோல் | 4.5 | கிராம் |
| 2. | மூங்கிலுப்பு | 4.5 | ,, |
| 3. | போஸ்தே பைரூன் பிஸ்தா | 0.5 | ,, |
| 4. | தான்றிக்காய் தோல் | 3.5 | ,, |
| 5. | நெல்லிக்காய் | 3.5 | ,, |
| 6. | ரோஜா மொக்கு | 0.5 | ,, |
| 7. | ஜஹர்மோஹ்ரா | 1.75 | ,, |
| 8. | கஹ்ரூபா | 1.75 | ,, |
| 9. | ஜாதிக்காய் | 1.75 | ,, |
| 10. | ஜாதிப்பத்திரி | 1.75 | ,, |
| 11. | லவங்கம் | 1.75 | ,, |
| 12. | லவங்கப்பட்டை | 1.75 | ,, |
| 13. | ஸலீகா | 1.75 | ,, |
| 14. | ஆப்பிள் முரபா | 66.40 | ,, |
| 15. | பிஹீமுரபா | 66.40 | ,, |
| 16. | சந்தனம் சிவப்பு | 3.5 | ,, |
| 17. | சந்தனம் வெள்ளை | 3.5 | ,, |
| 18. | ஸாதர் | 3.5 | ,, |
| 19. | தனியா | 3.5 | ,, |
| 20. | ஹப்புல் ஆஸ் | 3.5 | ,, |
| 21. | ஏலக்காய் சிறியது | 0.5 | ,, |
| 22. | ஏலக்காய் பெரியது | 0.5 | ,, |
| 23. | தேன் | 100 | ,, |

பொடியாக்க வேண்டிய சரக்குகளை நன்றாகப் பொடித்துச் சலித்து சூரணமாகச் செய்து வைக்கவும். கஹ்ரோபா ஜஹர் மோஹ்ரா இவற்றைத் தனியே கல்வத்திலிட்டுப் பொடித்துக் கொள்ளவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சி அத்துடன் முரபாக்களையும் அறைத்துச் சேர்த்து மீண்டும் காய்ச்சிப்பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு** : *6—12* கிராம் *1* நாளைக்கு *2* வேளை.

**தீரும் நோய்** : நாட்பட்ட பேதி (கிரஹணி). இரைப்பை, சிறு குடல் இவைகளின் கோளாறுகள், கல்லீரலின் கோளாறுல் ஏற்படும் பேதி.

சர்க்கரை சேர்த்துத் தயாரிப்பதும் உண்டு.

## 80. ஜவாரிஷ் தபாஷீர்

| | | |
|---|---|---|
| 1. | ரோஜா மொக்கு | 30 கிராம் |
| 2. | மூங்கிலுப்பு | 30 ,, |
| 3. | சந்தனம் வெள்ளை | 30 ,, |
| 4. | தனியா | 30 ,, |
| 5. | நெல்லிக்காய் | 30 ,, |
| 6. | ஹபுல் ஆஸ் | 15 ,, |
| 7. | துருஞ்சிக்காய் தோல் | 15 ,, |
| 8. | போஸ்த்-ஏ-ஸமாக் | 15 ,, |

9. மஸ்தகி நெ. 1 15 கிராம்
10. பச்சைக் கற்பூரம் 3.75 ,,
11. பிஹீ முரபா 638.25 ,,
12. கற்கண்டு 213.75 ,,
13. பன்னீர் 100 மி.லி.

முதல் 8 சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து கொள்ளவும். அடுத்த 2 சரக்குகளைக் கல்வத்திலிட்டு தனித்தனியே அரைக்கவும். பிஹீமுரபாவை உரலில் நன்ருக அரைத்துப் பன்னீருடன் கற்கண்டை வேண்டிய தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சிய பாகத்தில் சேர்த்து பாகுபதத்திற்குக் கொண்டு வரவும். பாகு ஆறிய பிறகு எல்லாச் சூரணங்களையும் சிறிது, சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** கல்லீரலை குளிரவைக்க, பித்த வாந்தி, பேதி, அஜீரணம், பித்தத்தினுல் ஏற்படும் தலை சுற்றல்.

## 81 ஜவாரிஷ் ஸாருனீஸாதா

1. மஞ்சள் முள்ளங்கி விதை 30 கிராம்
2. கர்ப்ஸ் விதை 30 ,,
3. இஸ்பிஸ்த் விதை 30 ,,
4. ஓமம் 30 ,,

| | | |
|---|---|---|
| 5. | சோம்பு | 30 கிராம் |
| 6. | முலாம் பழம் விதை | 30 ,, |
| 7. | வெள்ளரிப் பழவிதை | 30 ,, |
| 8. | போஸ்தே பீலே கரப்ஸ் | 30 ,, |
| 9. | அக்ராகாரம் | 10 ,, |
| 10. | ஸலீகா | 10 ,, |
| 11. | குங்குமப் பூ | 10 ,, |
| 12. | மஸ்தகி நெ. 1 | 10 ,, |
| 13. | அகில் கட்டை | 10 ,, |
| 14. | ஜாதிப்பத்திரி | 15 ,, |
| 15. | லவங்கம் | 15 ,, |
| 16. | வால் மிளகு | 15 ,, |
| 17. | மிளகு | 15 ,, |
| 18. | கற்கண்டு | 360 ,, |
| 19. | தேன் | 720 ,, |

முதல் 17 சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து கொள்ளவும். கற்கண்டையும், தேனையும் வேண்டிய அளவு தண்ணீருடன் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்திற்குக் கொண்டு வரவும். பாகத்தில் எல்லாச் சூரணங்களை சிறிது. சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு** : 6–12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்** : குண்டிக்காயில் ஏற்படும் கல்லடைப்பு, வலி, அதைச் சுற்றியுள்ள தசைகளில் ஏற்படும் வலி.

# பிரிவு 7

## கமீர்ஜாத்

### கமீரா செய்யும் விதம்

கமீரா என்பது பொதுவாக மாஜூன் என்னும் இனத்தை சேர்ந்தது. இவற்றில் சரக்குகள் பொடியாகவும், கஷாயமாகவும் சேர்க்கப்படுகின்றன. தயாரித்த கஷாயத்தை வடிகட்டி அத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சி, அக்கலவை கெட்டியான பாகு பதத்தை அடைந்ததும் அத்துடன் சரக்குகளின் சூரணங்கள் சேர்க்கப்படுகின்றன, பிறகு வெண்ணை எடுப்பது போன்று அக்கலவை வெண்மையாகும் வரை மத்தால் கடையப்படுகிறது. அம்பர், கஸ்தூரி, போன்றவைகளை தேன் அல்லது மேற்கூறிய பாகு இவைகளில் தனியே அரைத்து கடைவதற்கு முன் சேர்க்க வேண்டும்.

### 82. கமீரா அப்ரேஷம் ஸாதா

| | | |
|---|---|---|
| 1. | பட்டு கூண்டு-சுத்தம் செய்தது | 504 கிராம் |
| 2. | அகில் கட்டை | 5 ,, |
| 3. | ஜடாமாஞ்ஜில் | 5 ,, |
| 4. | துருஞ்சிக் காய்த் தோல் | 5 ,, |

| | | |
|---|---|---|
| 5. | மஸ்தகி நெ. 1 | 5 கிராம் |
| 6. | லவங்கம் | 5 ,, |
| 7. | ஏலரிசி | 5 ,, |
| 8. | லவங்கப்பத்திரி | 5 ,, |
| 9. | சந்தனம் | 6 ,, |
| 10. | அர்க்கௌஜபான் | 168 மி.லி. |
| 11. | அர்க்பேத்மிஸ்க் | 168 ,, |
| 12. | பன்னீர் | 168 ,, |
| 13. | ஆப்பிள் சாறு | 168 ,, |
| 14. | பிஹீ சாறு | 168 ,, |
| 15. | மாதுளம் பழச்சாறு | 168 ,, |
| 16. | மழைத் தண்ணீர் | 1920 ,, |
| 17. | தேன் | 240 கிராம் |
| 18. | கற்கண்டு | 720 ,, |

பட்டுக்கூண்டு நீங்கலாக முதல் 9 சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து கொள்ளவும். பட்டுக் கூண்டுகளை 10, 11, 12 இலக்க முள்ள திரவங்களில் 8–10 மணி நேரம்ஊரவைத்துப் பிறகு பாதி அளவு சுண்டும் வரை கஷாயமாகக் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்தில் தேன், கற்கண்டு, புதிய பழங்களின் சாறு இவற்றைச் சேர்த்துக் காய்ச் சிப் பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது, சிறி தாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை,

**தீரும் நோய் :** கல்லீரலையும், குண்டிக்காய்களையும் வலுவுறச் செய்ய, பலவீனம், நரம்புத்தளர்ச்சி, எல்லா வித வீக்கங்களும்.

## 83. கமீரா அப்ரேஷம் பாஜவாஹிர் ஹகீம் அர்ஷத்வாலா

| | | |
|---|---|---|
| 1. | பட்டு கூண்டு-சுத்தம் செய்தது | 504 கிராம் |
| 2. | அகில் கட்டை | 4 ,, |
| 3. | ஜடாமாஞ்ஜில் | 5 ,, |
| 4 | துருஞ்சிக்காய்த்தோல் | 5 ,, |
| 5. | மஸ்தகி நெ. 1 | 5 ,, |
| 6. | லவங்கம் | 5 ,, |
| 7. | ஏலரிசி | 5 ,, |
| 8. | லவங்கப்பத்திரி | 5 ,, |
| 9. | சந்தனம் வெள்ளை | 6 ,, |
| 10. | அர்க்கெளஜபான் | 168 மி. லி. |
| 11. | அர்க் பேத்மிஸ்க் | 168 ,, |
| 12. | பன்னீர் | 168 ,, |
| 13. | ஆபிள் சாறு | 168 ,, |
| 14. | மாதுளம் பழச்சாறு | 168 ,, |
| 15. | மழைத் தண்ணீர் | 1920 ,, |
| 16. | பிஹீ முரபா | 168 ,, |
| 17. | அம்பர் | 6 கிராம் |
| 18. | அர்க் நிலூபர் | 150 மி, லி, |

| | | | |
|---|---|---|---|
| 19. | வெள்ளி ரேக்கு | 6 | கிராம் |
| 20. | தங்க ரேக்கு | 6 | ,, |
| 21. | முத்து | 12 | ,, |
| 22. | யாகூத் | 9 | ,, |
| 23. | யஷப் | 9 | ,, |
| 24. | கஹ்ரூபா | 6 | ,, |
| 25. | பவளம் | 6 | ,, |
| 26. | கஸ்தூரி | 4 | ,, |
| 27. | குங்குமப்பூ | 5 | ,, |
| 28. | தேன் | 240 | ,, |
| 29. | சர்க்கரை | 720 | ,, |

பட்டுக் கூண்டு நீங்கலாக முதல் 9 சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். முத்து முதல் பவழம் வரையான 5 சரக்குகளை அர்க்கங்கள், பன்னீர், பழச்சாறுகள் கொண்டு கல்வத்தில் 12 மணி நேரம் நன்ருக அறைத்து உலர்த்தவும். பட்டுக் கூண்டுகளை மழைத் தண்ணீரில் 8-10 மணி நேரம் வரை ஊரவைத்துப் பாதி சுண்டும் வரைக் காய்ச்சி வடி கட்டிய கஷாயத்துடன் அரைத்த பிஹீ முரபாவையும் அர்க்நிலூபரையும் சர்க்கரையையும் தேனையும் சேர்த்துக் காய்ச்சி பாகு பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது. சிறிதாகச் சேர்த்து கலந்து கடைசியில் அம்பர், ரேக்குகள் ஆகியவற்றை சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்,

**அளவு :** 3—6 கிராம் நிலைமைக்கு ஏற்றவாறு 1 நாளைக்கு 1 அல்லது அதிகமான வேளைகள்.

**தீரும் நோய் :** தீவிரமாகவும், அதி தீவிரமாகவும் கேடு அடையும் இருதய நோய்கள்.

## 84. கமீரா பனப்ஷா

| | | |
|---|---|---|
| 1. | குலே பனப்ஷா | 100 கிராம் |
| 2. | சர்க்கரை | 800 ,, |

குலேபனப்ஷாவை 600 மி. லீ. தண்ணீரில் 8-10 மணி நேரம் வரை ஊரவைத்து, பிறகு பாதி சுண்டும் வரைக் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்தில் சர்க்கரையை சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைத்துக் கொள்ளவும்.

**அளவு.** 12—24 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** மூளை வறட்சி, மலபந்தம், பித்தாதிக்கம்.

## 85. கமீரா கௌஜபான் ஸாதா

| | | |
|---|---|---|
| 1. | பர்கே கௌஜபான் | 36 கிராம் |
| 2. | குலே கௌஜபான் | 12 ,, |
| 3. | தனியா | 12 ,, |
| 4. | பட்டு கூண்டு—சுத்தம் செய்தது | 12 ,, |

| | | |
|---|---|---|
| 5. | பஹ்மன் ஸுபீத் | 12 கிராம் |
| 6. | பஹ்மன் ஸுர்க் | 12 ,, |
| 7. | துக்மே பாலங்கோ | 12 ,, |
| 8. | சந்தனம் | 12 ,, |
| 9. | துக்மே-பரஞ்ஜ்மிஸ்க் | 12 ,, |
| 10. | பாதரஞ்போயா | 12 ,, |
| 11. | பிஹீ முரபா | 90 ,, |
| 12. | கற்கண்டு | 960 ,, |
| 13. | தேன் | 480 ,, |

முதல் 10 சரக்குகளை இடித்து வேண்டிய அளவு தண்ணீரில் சேர்த்து 8-10 மணி நேரம் ஊரவைத்து, பாதி அளவு சுண்டும் வரை காய்ச்சி, வடிகட்டிய கஷாயத்தில் கற்கண்டையும், தேனையும் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் முரபாவையும் நன்ருக அரைத்து சேர்த்து, மறு முறை காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 12—24 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** இதயத்தின் இயக்கத்தில் ஏற்படும் கோளாறுகள், நரம்புக் கோளாறுகள், தூக்கமின்மை.

## 86. கமீரா கௌஜபான் அம்பரி ஜவாஹிர்வாலா

| | | |
|---|---|---|
| 1. | கௌஜபான் | 36 கிராம் |
| 2. | குலே கௌஜபான் | 12 ,, |
| 3. | பட்டு கூண்டு-சுத்தம் செய்தது | 12 ,, |
| 4. | தனியா | 12 ,, |
| 5. | சந்தனம் வெள்ளை | 12 ,, |
| 6. | பஹ்மன் ஸுபீத் | 12 ,, |
| 7. | பஹ்மன் ஸுர்க் | 12 ,, |
| 8. | பாதரஞ்ஜ் போயா | 12 ,, |
| 9. | உஸ்துகுத்தூஸ் | 12 ,, |
| 10. | துக்மே பாலங்கோ | 12 ,, |
| 11. | துக்மே பரஞ்ஜ் மிஸ்க் | 12 ,, |
| 12. | தோதரி ஸுர்க் | 12 ,, |
| 13. | தோதரி ஸுபீத் | 12 ,, |
| 14. | அம்பர் | 21 ,, |
| 15. | வெள்ளி ரேக்கு | 5 ,, |
| 16. | தங்க ரேக்கு | 6 ,, |
| 17. | முத்து | 3 ,, |
| 18. | கஹ்ரூபா | 3 ,, |
| 19. | தேன் | 240 ,, |
| 20. | சர்க்கரை | 960 ,, |

பட்டுக் கூண்டு நீங்கலாக முதல் 13 சரக்குகளை நன்றாகப் பொடித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். பட்டுக் கூண்டுகளை வேண்டிய தண்ணீரைச் சேர்த்து 8-10 மணி நேரம் ஊரவைத்து, பிறகு பாதி சுண்டும் வரைக் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் தேனை யும் சர்க்கரையையும் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் பன்னீருடன் சேர்த்து கல்வத்தில் நன்றாக அரைத்து உலர்ந்த முத்து, கஹ்ருபா மற்ற சரக்கு களில் சூரணங்களனைத்தையும் சிறிது, சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பிறகு பொடித்த அம்பர், ரேக்குகள் ஆகியவற்றைச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 5 கிராம் அர்க் கௌஜபானுடன்.

**தீரும் நோய்:** இருதயம், மூளை, இவற்றை பலப் படுத்த, பார்வையை அதிகரிக்க, பொதுவாக பலத்தை பெருக்க.

## 87. கமீரா மர்வரீத்

| | | |
|---|---|---|
| 1. | ஜஹர் மோஹ்ரா | 10 கிராம் |
| 2. | பாதரஞ் போயா | 10 ,, |
| 3. | முத்து | 10 ,, |
| 4. | பஹ்மன் ஸுர்க் | 10 ,, |
| 5. | பஹ்மன் ஸுபீத் | 10 ,, |

| | | | |
|---|---|---|---|
| 6. | தோதரி ஸூபீத் | 10 | கிராம் |
| 7. | தோதரி ஸூர்க் | 10 | ,, |
| 8. | துக்மே பாதரஞ் போயா | 10 | ,, |
| 9. | குங்குமப்பூ | 10 | ,, |
| 10. | அம்பர் | 10 | ,, |
| 11. | கஸ்தூரி | 10 | ,, |
| 12. | குலேகௌஜபான் | 100 | ,, |
| 13. | பருப்புக் கீரை விதை | 100 | ,, |
| 14. | அர்கே-பேத்மிஸ்க் | 800 | மி.லீ. |
| 15. | பன்னீர் | 800 | ,, |
| 16. | சர்க்கரை | 1600 | ,, |

அம்பர், கஸ்தூரி, ஜஹர்மோஹ்ரா, முத்து நீங்கலாக மற்ற பொடிக்க வேண்டிய சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். 1, 3 சரக்குகளை பன்னீருடன் கல்வத்தில் விட்டு நன்ருக அரைத்து உலரவைக்கவும். சர்க்கரையை அர்கே-பேத் மிஸ்க்குடன் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சேர்த்து ஆறியபின்னர் கஸ்தூரி, அம்பர் இவைகளையும் பொடித்துச் சேர்த்துக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு** : 3-6 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்** : நரம்புகளுக்கு அமைதி உண்டாக்க, நரம்புக் கோளாறுகள், இதயத் துடிப்பு, க்ஷயம்.

## 88. கமீரா—உஸ்துகுதூஸ்

| | | |
|---|---|---|
| 1. | குலே-உஸ்து குத்தூஸ் | 42 கிராம் |
| 2. | குலேகௌஜபான் | 21 ,, |
| 3. | சல்கோஸா-பருப்பு | 21 ,, |
| 4. | வெள்ளி ரேக்கு | 10 இலைகள் |
| 5. | அம்பர் | 3.5 கிராம் |
| 6. | தேன் | 262.5 ,, |

முதல் 2 சரக்குகளை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். சல்கோஸாவை உரலிலிட்டு நன்ருக அரைத்து வைக்கவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் அரைத்த சல்கோஸா பருப்பைச் சேர்த்து மறு முறை காய்ச்சிப் பாகு பதத்தில் பொடித்த சூரணத்தைச் சிறிது, சிறிதாகச் சேர்த்து ஆறிய பின்னர் தனியே கல்வத்திலிட்டுப் பொடித்த அம்பரையும் வெள்ளி ரேக்குகளையும் சேர்த்து நன்ருக கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு**: 6–12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்**: நரம்புக் கோளாறுகள், பக்ஷ வாதம், அர்த்திதம் (முகத்தை ஒரு பக்கம் இழுக்கும் வாயு).

# பிரிவு 8

## அக்ராஸ்—டாப்லட்ஸ்

### சூர்ஸ் — (டாப்லட்ஸ்) செய்யும் முறை

சூர்ஸ் — இவைகளும் மாத்திரை இனத்தைச் சேர்ந்தவைகளே. அமைப்பில் இவைகள் தட்டை யாக இருக்கும். தட்டையான மாத்திரைகளை உடைத்து விழுங்குவது எளிதாதலால் இம்முறையும் பழக்கத்தின் உள்ளது.

கிரான்யூல் என்ற ரவைகளாக்கியே மருந்துகளைத் தட்டை மாத்திரைகளாக்க முடியும். நுண்ணிய தூளாக இருந்தால் மாத்திரைகள் சரியாக அமைய மாட்டா. மேலும் கையாளும் போது உடைந்து பொடி யாகாதிருக்க அவற்றுடன் வேலம்பிசின் போன்ற ஒட்டுச் சரக்குகளைச் சேர்க்க வேண்டும். சில மருந்து கள் வறட்சி காரணமாகப் பொடியாகியும், அச்சுடன் ஒட்டிக் கொண்டும் மாத்திரையாக உருப்பெறுது. இந்த நிலைகளில் திரவமான மெழுகு (Liquid paraffin), Talcum powder போன்றவை சிறிது சேர்க்க வேண்டும். இது முற்றிலும் அனுபவ வாயிலாகவே அறியத்தக்கது.

சூரணங்களின் தன்மைக் கேற்ப நிர்ணயித்த அளவுள்ள சுத்தமான வேலம்பிசினை நன்கு பொடித் துப் போதுமான அளவு சுத்தமான தண்ணீரில் ஊற வைத்து அறைத்து வடிகட்டிக்கசடு நீக்கிக் குறிப்

பிட்ட சூரணத்துடன் சேர்த்துக் கலந்து சிறு துணுக்கு களாகப் பரப்பி வெய்யிலில் உலர்த்தவும்.

அதிகம் ஈரமில்லாமலும், அதிகம் உலராமலும் உள்ளபதமான நிலையில் ரவையாக்கும் இயந்திரத்தி லிட்டு ரவையாக்கி நன்கு உலர்த்தவும். அந்த இயந்திர மில்லாவிடில் நன்கு உலர்த்தித் துண்டுகளை ரவையாக இடித்துப் பெரும் கண் சல்லடை வழியே சலித்தும் சித்தமாக்கலாம். பின்னர் தேவையாயின் ரவை களுடன் சிறிது திரவித்த மெழுகு, டால்கம்பவுடர் இவற்றைச் சேர்த்து முறைப்படி இயந்திரத்தில் தட்டையான மாத்திரைகளாக்கவும்.

பெரும்பாலான குர்ஸைகளையும், குடிகைகளையும் நன்கு உலர்ந்த பின்னரோ, பதத்திலோ ரவைகளாகச் செய்து நன்கு உலர்த்திப் பொடித்துச் சலித்த வேலம் பிசின் சேர்த்துத் தட்டை மாத்திரை செய்ய வேண்டும். சூரணத்திற்குக் குறிப்பிட்டது போன்று ஊறவைத்த வேலம் பிசினை உபயோகிக்க வேண்டாம்.

பெருங்காயம் போன்ற ஒட்டும் சரக்குகள், நேர் வாளம் போன்று எண்ணெய் பசை உள்ளவை, பருப்பு வகைகள் சேர்ந்து உதிரும் தன்மை உள்ளவை. இவைகள் தட்டை மாத்திரைகளாக உருப்பெறு. பஸ்மங்கள், சூரணங்கள், குடிகைகள் நல்ல உருவத் துடன் கவர்ச்சிகரமான மாத்திரைகளாக அமை கின்றன.

இந்த இயந்திரத்தில் 50 மி. கி. முதல் 1 கிராம் வரை எடையுள்ள மாத்திரைகளைத் தயாரிக்கலாம்.

பொருத்தமான அச்சுக்களை மட்டும் மாற்றி மாற்றி அவை தயாரிக்கப் பெருகின்றன.

தயாரித்த மாத்திரைகளை விரைவில் எண்ணுவதற்கான தட்டு ஒன்று உண்டு. அது விரல் பிடியுடன் 25-50 என்று குறிப்பிட்ட குழிகளுடன் கூடியது. தயாரித்த மாத்திரைகள் அந்தக் குழிகளுக்குப் பொருத்தமாக இருக்கும். ஒரு முறை அந்தத் தட்டைப் பாய்ச்சி அசைத்து எடுக்கக் குழிகள் மாத்திரைகளால் நிரம்பிக் குறிப்பிட்ட எண்ணிக்கையைக் காட்டும். வேண்டிய அளவு வரை அவ்விதம் தட்டைப் பாய்ச்சி எண்ணிக் கொள்ளலாம். தானுகவே எண்ணியும் இயந்திர உதவியாலும் எண்ணிக் கொள்ளலாம்.

இந்த முறையில் மாத்திரை செய்யும் போது கஸ்தூரி, பச்சைக் கற்பூரம், கற்பூரம் முதலியவற்றை மாத்திரைகளாக்கும் தருணத்தில் சித்தமாக்கிய ரவைகளுடன் சேர்க்க வேண்டும்.

## 89. குர்ஸ் குல்

| | | |
|---|---|---|
| 1. | ரோஜா மொக்கு | 50 கிராம் |
| 2. | அதிமதுரம் | 50 ,, |
| 3. | மூங்கிலுப்பு | 25 ,, |
| 4. | ஜடாமாஞ்சில் | 25 ,, |
| 5. | அப்ஸன்தீன் | 25 ,, |
| 6. | துரஞ்ஜபீன் | 37.5 ,, |
| 7. | பன்னீர் | வேண்டிய அளவு |

முதல் 6 சரக்குகளை நன்முக பொடித்துக் கொண்டு கல்வத்திலிட்டு வேண்டிய அளவு பன்னீரைச் சேர்த்து நன்முக அரைத்து விழுதுபோல் செய்து உலர்த்தி வைக்கவும். உலர்ந்த பிறகு ரவை (கிரான்யூல்) செய்து, மாத்திரைகள் (டாப்லட்ஸ்) செய்யும் இயந்திரத்தில் 500 மி. கி. எடையுள்ள மாத்திரைகளாக செய்து வைக்கவும்.

**அளவு:** 2 மாத்திரை 1 நாளைக்கு 3 வேளை.

**தீரும் நோய்.** நாட்பட்ட ஜுரங்கள், சிறு மல பந்தம், கல்லீரல் அழற்சி.

## 90. குர்ஸ் குல்நார்

| | | |
|---|---|---|
| 1. | உலர்ந்த மாதுளம் பூ | 40 கிராம் |
| 2. | காவிக்கல் | 40 ,, |
| 3. | வேலம் பிசின் | 40 ,, |
| 4. | ரோஜா மொக்கு | 30 ,, |
| 5. | காசிக்கட்டி | 30 ,, |
| 6. | பாதம் பிசின் | 20 ,, |
| 7. | மாதுளம் பூச்சாறு | வேண்டிய அளவு |

மாதுளம் பூ 200 கிராம் எடுத்து நன்முக இடித்து வேண்டிய அளவு சிறிதளவு தண்ணீரைச் சேர்த்து சாறு எடுக்கவும். முதல் 6 சரக்குகளை பொடித்துக் கல்வத்திலிட்டு மாதுளம் பூ சாற்றுல் நன்முக அரைத்து உலர வைத்து. ரவை செய்து 500 மி. கி. எடையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைக்கவும்.

**அளவு :** 2 மாத்திரை 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** ரத்த வாந்தி. சுவாஸாயத்திலிருந்து ரத்தம் கக்குதல்.

## 91. குர்ஸ் கஹ்ரோபா

1. கஹ்ரோபா — 90 கிராம்
2. பன்னீர் — வேண்டிய அளவு

கஹ்ரோபாவை சிறு துண்டுகளாகச் செய்து கல்வத்திலிட்டு வேண்டிய அளவு பன்னீரைச் சேர்த்து நன்றாக விழுதுபோல் அரைத்து உலர்ந்ததும் ரவை செய்து 200 கிராம் எடையுள்ள மாத்திரைகளாக செய்து வைக்கவும்.

**அளவு :** 1—2 மாத்திரை 3 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** இரைப்பையிலிருந்தும், சுவாஸப்பையிலிருந்தும் வெளிப்படும் (கக்கப்படும்) ரத்தத்தை நிறுத்த, எல்லாவிதமான ரத்தப் போக்குகளையும் நிறுத்த, ஜன்னியில் ஏற்படும் பேதி, (டைபாயிடு உபத்திரவம்) பொதுவாக பேதி.

## 92. குர்ஸ மதனி

| | | |
|---|---|---|
| 1. | மூங்கிலுப்பு | 10 கிராம் |
| 2. | சீந்தில் சர்க்கரை | 10 ,, |
| 3. | பச்சை ஏலக்காய் விதை | 10 ,, |
| 4. | ஜஹர் மொஹ்ரா கதாயி | 10 ,, |
| 5. | குனைன் ஸல்பேட் | 2.5 ,, |
| 6. | பச்சைக் கற்பூரம் | 800 மி. கி. |
| 7. | இஸப்கோல் தண்ணீர் | வேண்டிய அளவு |

எல்லாச் சரக்குகளையும் தனித்தனியே பொடித்து 30 கிராம் இஸப்கோல்வித்தை 240 மி.லீ. தண்ணீரில் ஊரவைத்து எடுத்த சாற்றைச் சேர்த்து கல்வத்திலிட்டு நன்றாக அரைத்து உலர்ந்த பிறகு ரவை செய்து 500 மி கி. எடையுள்ள மாத்திரைகள் செய்து வைக்கவும்.

அளவு: 2—4 மாத்திரைகள் 1 நாளைக்கு 2 முதல் 3 வேளை.

தீரும் நோய்: எல்லாவித ஜுரங்கள், முக்கியமாக முறைக்காய்ச்சல்.

## 93. குர்ஸ் மர்வரீத்

| | | |
|---|---|---|
| 1. | முத்து | 10 கிராம் |
| 2. | பன்னீர் | 250 மி. லீ. |

முத்துக்களைக் கல்வத்திலிட்டு சிறிது சிறிதாக பன்னீரைச் சேர்த்து நன்றாக அரைத்து உலர வைக்கவும். ஒவ்வொரு நாளும் 2 மணி நேரம் வீதம் 3 நாட்கள் அரைத்து உலர்ந்த பிறகு ரவை செய்து 50 மி.கி. மாத்திரைகள் செய்து வைக்கவும்.

**அளவு :** 1—2 மாத்திரைகள் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** க்ஷயம், பால் கொடுக்கும் ஸ்திரீகளின் பலவீன நிலை, குழந்தைகளுக்கு எலும்பு போஷாக்கு குறைந்த நிலை

## 94. குர்ஸ் முர்

| | | |
|---|---|---|
| 1. | போளம் | 45 கிராம் |
| 2. | துர்முஸ் | 75 ,, |
| 3. | ஸதாப் இலை | 30 ,, |
| 4. | புதினா இலை காய்ந்தது | 30 ,, |
| 5. | கிர்தமானா | 30 ,, |
| 6. | மிஸ்க்தராமஷி | 30 ,, |
| 7. | மஞ்ஜிட்டி | 30 ,, |
| 8. | பெருங்காயம் | 30 ,, |
| 9. | ஜாவோஷீர் | 30 ,, |
| 10. | ஸக்பீனஜ் | 30 ,, |

போளம், பெருங்காயம், ஜாவோஷீர் இவைகளைக் கல்வத்திலிட்டு வேண்டிய அளவு தண்ணீரைச் சேர்த்து நன்ருக அரைத்துக் கொள்ளவும். மற்ற சரக்குகளையும் நன்ருகப் பொடித்துக் கல்வத்திலிட்டு தண்ணீரைச் சேர்த்து நன்ருக அரைத்து உலர்ந்த பிறகு ரவை செய்து 500 மி.கி. எடையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைக்கவும்.

**அளவு** : 1—2 மாத்திரைகள் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்** : சூதகக்கட்டு, பிரசவத்திற்குப் பின் அழுக்கு குறைந்தோ, அதிகமாகவோ வெளிப் படுதல்.

## 95. குர்ஸ்—ஜரிஷ்க்

| | | |
|---|---|---|
| 1. | ஜரிஷ்க் | 75 கிராம் |
| 2. | காஸினி விதை | 15 ,, |
| 3. | பருப்புக் கீரை விதை | 15 ,, |
| 4. | வெள்ளரி விதை | 15 ,, |
| 5. | ரோஜா மொக்கு | 25 , |
| 6. | ஜடா மாஞ்சில் | 5 ,, |
| 7. | ரேவல் சீனி | 5 , |

ஜரிஷ்க்கைச் சுத்தம் செய்து கல்வத்திலிட்டு அரைத்து, அதனுடன் மற்ற சரக்குகளின் சூரணத்தையும், சேர்த்து நன்ருக அரைத்து உலர்ந்த பிறகு

ரவை செய்து 500 மி. கி. எடையுள்ள மாத்திரை களாகச் செய்து வைக்கவும்.

**அளவு** : 2 மாத்திரைகள் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்** : உஷ்ணம் ஓங்கிய நிலையில் உண்டாகும் கல்லீரல் கோளாறுகள், காமாலை.

# பிரிவு 9

## குஸ்தாஜாத் (பற்பங்கள்)

### பற்பங்கள் செய்யும் முறை

குஸ்த் என்பதற்கு நீர் அல்லது சாம்பல் எனப் பொருள். இம்முறையால் பக்குவப்படுத்தப்பட்டவைகள் பெரும் பாலும் வெண்ணிறமாகவே அமைவதால் அப்பெயரைக் கொண்டு குறிப்பிடப்படுகின்றன.

மிகவும் கடினமானதும் எளிதில் உட்கொள்ள முடியாததுமான ரஸம், மஹாரஸங்கள், உபரஸங்கள், ஸாதாரண ரஸங்கள், நவரத்னங்கள், உபரத்னங்கள், உலோகங்கள் ஆகியவைகள் இம் முறைக்குட் படுத்தப்படுகின்றன.

இம் முறை சோதனம், மாரணம் என இரண்டு பிரிவுகள் கொண்டது. முன் கூறிய பொருட்களைக் குறிப்பிட்ட செய்முறைக்கு உட்படுத்தி அவைகள் பால் இயற்கையாலும் செயற்கையாலும் அமைந்துள்ள கசடுகளை அகற்றுவதைச் சோதனம் எனவும் பின்னர் அவற்றைச் சாறுவகைகளைக் கொண்டு அறைத்து முறைப்படி பன் முறை புடமிட்டு நீராக்குவதை மாரணம் எனவும் கூறுவர்.

பழுக்கக் காய்ச்சிக் குறிப்பிட்ட திரவத்தில் தோய்த்தல், ஊற வைத்தல் எனப் பொருட்களுக் கேற்ப சோதனம் பலவகைப்படும்.

ஆனால் பஸ்மமாக மாற்றும் மாரணமுறை சற்றேறக் குறைய எல்லாப் பொருட்களுக்கும் பொதுவானதே. ஏனெனில் அவைகள் எல்லாமே புடமிட்டு பஸ்மமாக்கப்படுகின்றன.

ஆயினும் கனிப் பொருட்களில் உருகு நிலை, ஆவியாகும் நிலை இவைகளுக் கேற்ப புடங்கள் வித்தியாசப்படுகின்றன. உதாரணமாகத் தங்கம், வெள்ளி, காரீயம், வெள்ளியம், துத்தநாகம் இவைகள் பஸ்மமாகக் குறைந்த உஷ்ணம் தான் தேவைப் படுகிறது. தீ அதிகமாயின் அவைகள் கற்கள் போல் கடினமாகி விடுகின்றன. ஆகையால் சிறு தீயில் ஆரம்பித்து அதிகமான தீயைத் தாங்கும் அளவிற்கு அவற்றை முறைப்படிப் பக்குவப்படுத்த வேண்டும்.

அப்ரகம், லோஹம், மண்டூரம், மாக்ஷிகம், காந்தம், தாம்ரம் போன்றவைகட்கு தீவிரமான உஷ்ணம் தேவைப் படுகிறது.

ரஸம் தாளகம் போன்றவைகளுக்கோ மிகமிகக் குறைந்த உஷ்ணமே தேவைப்படுகிறது.

ஆகவே பொருள்களுக்கேற்ப புடங்களை நிர்ண யித்தல் வேண்டும்.

சுத்தி செய்த பின்னர் முன் கூறிய பொருட்களை கல்வத்திலிட்டு அறைக்கத்தக்க வண்ணம் நன்கு இடித்து சலித்துப் பொடியாக்க வேண்டும். பிறகு அந்தப் பொடிகளைக் கல்வத்திலிட்டு குறிப்பிட்ட திரவங்களைக் கொண்டுஅறைத்து சிறிய வில்லைகளாகத் தட்டி வெய்யிலில் உலர்த்தவும். வில்லைகளில் ஈரமிருந் தால் பஸ்மத்தின் நிறம் சரியாக அமையாது. ஆதலால் அவற்றை நன்கு உலர்ந்த பின் மண் அகலில் பரப்பி அதை மற்றோர் அகலால் மூடி அவை சேருமிடத்தைச் சீலை மண் கொண்டு பூசி அது உலர்ந்த பின் உலோகங் களில் உருகுநிலை முதலியவற்றிற்கேற்ப நிர்ணயித்த புடங்களில் அமைத்துப் பக்குவப் படுத்தவும்.

குறிப்பிட்டுள்ளபடியோ அல்லது நன்கு பஸ்ம மாகும் வரையோ திரும்பத்திரும்ப அரைத்து வில்லைத் தட்டிப் புடமிட வேண்டும். ஒவ்வொரு முறையும் புடம் நன்கு ஆறிய பின்னரே அகல்களையும் அவற்றினுள் இருக்கும் மருந்துப் பொருட்களையும் பிரித்தெடுத்தல் வேண்டும்.

புடமிட வில்லைகளை அகல்களில் அமைக்கும் போது அவற்றைக் குவியலாகவோ, இரண்டு அடுக்கு களுக்கு அதிகமாகவோ அமைத்தல் கூடாது. அப் பொழுதுதான் உஷ்ணம் நன்கு செயல்படும். பஸ்ம மும் நன்கு அமையும். இந்த நற்பலன் கிடைக்க உபயோகிக்கும் அகல்களும் அதிக ஆழமுள்ளதாக இருத்தல் கூடாது.

ரஸம், லிங்கம், வெள்ளைப்பாஷாணம், கந்தகம், தாளகம், மனோசிலை போன்ற உஷ்ணம் தாங்காத பொருள்களைச் சேர்த்து வேறு பொருட்களை பஸ்ம மாக்கும் போது அகல்கள் சேருமிடத்தை நன்கு சீலை மண் பூசி அவற்றை வெளியேற விடாது செய்ய வேண்டும்.

புடமிடும் போது அவ்விடத்தில் காற்று வலுத்து வீசுமாயின் உஷ்ணம் காற்றின் வழியே இழுக்கப்படுவதால் தீ அகல்களில் உறைப்பதில்லை. காற்று இல்லாத இடங்களில் எரி பொருட்கள் நன்கு எரிய மாட்டா. ஆகையால் மிதமான காற்றோட்ட முள்ள இடங்களைத் தேர்ந்தெடுத்து அங்கு பூமியில் வட்டவடிவமான குழிகள் வெட்டி மண் சரியா வண்ணம் அவற்றைச் சுற்றிலும் செங்கற்களால் கட்டி அதனுள் எரி பொருளை அமைத்துப் புடமிட வேண்டும்.

புடங்களில் பெரும் பாலும் வரட்டிகளே எரி பொருளாக உபயோகிக்கப் படுகின்றன. வரட்டி கிடைக்காத இடங்களில் மரங்களின் கரியையும்

உபயோகிக்கலாம். கோக்கு, மின்சாரம், ஆவி போன்ற வைகளையும் சிலர் பயன்படுத்துகின்றனர். நெல் உமியையும் சில இடங்களில் எரி பொருளாக உபயோகிக்கலாம். மாட்டின் கால் குளம்புகளால் தூளாக்கப்பட்ட உலர்ந்த சாணத்தின் தூள்களும் அவ் விதம் உபயோகமானதே. காடுகளில் தானுக உலர்ந்து இடக்கும் சாணங்களை சாலச் சிறந்ததாகக் கூறுகின்றனர். ஆனுல் இன்றைய சமூக அமைப்பில் வேண்டும் அளவு அது கிடைப்பதரிது.

எனவே வியாபார முறையில் தயாரிக்கப்படும் வரட்டிகளே நகரங்களில் கிடைக்கின்றன. அவற்றில் மண்போன்ற கலப்படமும் அதிகம். ஆகையால், தாபமானிகளைக் கொண்டு பல தடவைகள் பல முறைகளில் பொருள்களுக்கேற்ற உஷ்ண நிலையை ஆராய்ந்து நிர்ணயித்து அதற் கேற்ப குறைத்தோ, கூட்டியோ வரட்டிகளை அவ்வப் போது உபயோகிக்க வேண்டும். இது விஷயத்தில் அனுபவம் இன்றியமையாததாகையால் பன்முறை பழக்கத்தின் வாயிலாகவே நிதானம் ஏற்படும்.

இவ்விதம் நிர்ணயித்த அளவு வரட்டிகளில் அரை முதல் முக்கால் பகுதியைக் குழியில் பரப்பி அடுக்கி அதன் மேல் நடுவே சீலை உலர்ந்த அகல் ஜதையை வைத்து அதன் மேல் மிஞ்சியுள்ள வரட்டிகளைப் பரப்பி மூடி மேல் பாகத்தில் நான்கு பக்கங்களிலும் தீயிடவும்.

நெருப்பின் அதிகமான உஷ்ணத்தைப் பொறுக் காததாளகம் போன்றவைகளைக் குறிப்பிட்ட சாம்பல் களில் மறைத்துப் புடமிடுவது வழக்கம். அவ்விடங் களில் அகலில் குறிப்பிட்ட சாம்பலைப் பரப்பி அதன் மேல் உலர்ந்த வில்லைகளை வைத்து அதன் மேலும் சாம்பல் கொண்டு மறைத்து மேல் அகல் மூடிச் சீலை செய்து உலர்ந்த பின் புடமிடவேண்டும். விரைவில் பஸ்மமாவதையும் அவற்றைத் திறம்படச் செயலாற்ற வகை செய்வதையும் உத்தேசித்து பற்பல மூலிகை களைப் பொடியாக்கி முன் கூறிய சாம்பல் போல் உபயோகிப்பதும் உண்டு.

காற்று உட்புக வகை செய்யும் ஐந்தாறு அங் குலத்துளை நடுவே அமைத்த இரும்பு மூடிகளைக் கொண்டு மேற்கூறிய குழிகளை மூடியும் சிலர் பஸ் மங்களைத் தயாரிக்கின்றனர். காற்று தீவிரமாக அடித்தாலும் தீயின் தரம் ஒரே விதமாகச் செயல்பட இது உபயோகமாகிறது போலும்.

இது விஷயங்களை மனதில் கொண்டு நல்ல முறை யில் தயாரித்த பஸ்மங்களைக் கல்வத்திலிட்டு நன்கு பொடித்து பட்டுத் துணி அல்லது 100–ம் நெம்பர் சல்லடை இவற்றின் வழியே சலித்து பத்திரப் படுத்தவும். இவை ஒருவித சுவையுமின்றி அமைந்திருக்கும். 'சந்திரிகை'' என்ற பளபளப்பு சிறிது கூட இருக்காது. அப்ரகம், தாம்ரம், நாகம், லோஹம், தங்கம், வெள்ளி இவைகள் புடங்களின் எண்ணிக்கை அதிகமாக அதிகமாக குணத்தில் சிறந்து விளங்குகின்றன. பவழம், முத்து, முத்துச் சிப்பி,

பலகரை, சங்கு, ரத்னங்கள், உபரத்னங்கள் முதலிய வைபுடம் அதிகமாக அதிகமாக நற்குணங்களை இழக்கின்றன.

முத்துச்சிப்பி, சங்கு, பலகரை போன்றவைகளின் பஸ்மங்களின் காரம் சிறிது அடங்க அவற்றை எலுமிச்சம்பழச் சாற்றில் ஊற வைத்து உலர்த்திப் பொடித்து உபயோகித்தல் நலம். இது அவற்றிலுள்ள நாக்கைப் புண்ணாக்கும் சுண்ணாம்புக்குச் சமமான கூறிய சக்தியைக் குறைக்கும்.

பொதுவாக ஆறு மாதங்கள் சென்ற பின்னரே பற்பங்களை உபயோகப் படுத்த வேண்டும். விஷ சரக்குகள் விஷயத்தில் இவ்விதி அவசியம் பின் பற்றத் தக்கது. காலப் போக்கிலேயே பற்பங்களின் தரம் உயருகிறது. அவ்விதமில்லாது தயாரித்த உடனேயே அவைகளை உபயோகிக்க வேண்டுமானால் குறைந்தது மூன்று நாட்களாவது நன்கு சீலை செய்து பூமியில் புதைத்து வைக்க வேண்டும். இம் முறை அவைகளின் கூறிய தன்மையை சிறிது குறைக்கிறது. பற்பங்கள் நன்கு அமையும் வரை அவைகளை பன்முறை கூட அரைத்து புடமிடலாம்.

நன்கு தயாரித்த பஸ்மங்களுக்குச் சில தேர்வுகள் கூறப் படுகின்றன. அவைகளாவன.

1. தயாரித்த பஸ்மங்களைச் சிறிது விரல்களில் தேய்த்து நோக்க அவை விரல்களின் ரேகைகளுள் பதிந்திருக்கும், விரல்களின் நடுவே அவற்றை எடுத்து

அழுத்த அதன் மேலும் விரல்களின் ரேகைகள் காணப்படும்.

2. ஒரு கண்ணுடிக் கோப்பையில் தண்ணீர் நிரப்பி அது அமைதியாக நின்றவுடன் அதன் மேல் வஸ்திரத்தின் வழியே சலித்த பஸ்மத்தைச் சிறிது எடுத்து விரல்களால் தேய்த்தவாறே தூவ அது தண்ணீரில் மூழ்காமல் மிதந்து வரும்.

3. தண்ணீரில் மூழ்காமல் மிதந்து வரும் பஸ் மத்தின்மேல் நெல் போன்ற தானிய மணியை மெல்ல வைக்க அதையும் சுமந்து கொண்டு மூழ்காமல் பஸ்மம் மிதந்து வரும்.

4. மித்ர வர்க்கம் என்ற வெல்லம், குன்று மணி, வங்காரம், தேன், நெய் இவ்வைந்து சரக்குகளுடன் தயாரித்த பஸ்மத்தைச் சேர்த்தரைத்து மூசையிலிட்டு அவை பஸ்மமாகத் தேவையான உஷ்ணத்தின் அளவைக் கொண்டு எரிக்க அவை தன் மூலப் பொருளாகமாருது.

இந்த பஸ்மத்தைச் சிறிதளவு வெள்ளியோடு மூசையில் வைத்து உலேயில் ஊதி உருக்கவும். உருக்கிய வெள்ளியுடன் பஸ்ம சிறிதளவு கூடச் சேராது தனித்து நிற்கும்.

இவைகள் உலோகங்கள் மடிந்தும் லேசாகவும் நுண்ணியதாகவும் பஸ்மங்கள் அமைந்திருப்பதைக் குறிக்கின்றன.

இந்த பஸ்மங்கள் நாட்கள் ஆக ஆக சக்திவாய்ந் தவைகளாகின்றன.

பவழம், முத்து, ஜஹர்மோஹ்ராகதாயி போன்ற வைகளை பன்னீர். தாழம்புத் தீநீர், அர்க் பேத் மிஸ்க் போன்ற திரவங்களால் நன்கு அறைத்து உலர்ந்த பின் பொடித்து பத்திரப்படுத்தி உபயோகிப்பதும் உண்டு. இவை குளிர்ந்த தன்மை பொருந்தியவை இவைகளை இரவு முழுவதும் மேல் மாடியில் சந்திர கிரணங்கள் படும்படி சில நாட்கள் வைத்து அறைத்துத் தயாரிப்பதும் உண்டு. இவை அதிகக் குளிர்ச்சி வாய்ந்தவை.

## 96. குஸ்ந் அப்ரக் ஸியா

**அப்ரக சோதனம்:**

கிருஷ்ணப்ரகக் கட்டிகளை உடைத்து அவற்றில் பதிந்துள்ள கல் முதலியவைகளை நீக்கி இரும்புச் சட்டியிலிட்டுத் துருத்தியால் ஊதி எரித்து அது சிவந்தவுடன் கோமூத்திரத்தில் நனைக்கவும். இவ் விதம் ஏழு தடவை திரும்பத் திரும்பச் செய்ய அப்ரகம் சுத்தியாகிறது.

பின்னர் அதை ஓர் கம்பளி அல்லது துணி இவற்றில் கால் பங்கு நெல்லுடன் மூட்டையாகக் கட்டிக் காடியில் 3 நாட்கள் ஊறவைக்கவும். நான் காம் நாள் அந்த மூட்டையை அவிழ்க்காது இரு கை களாலும் பிசைந்து ஊறிய அப்ரக அணுக்களை துணி

வழியே வெளியேற்றி அதே திரவத்தில் முழுவதும் விழச் செய்யவும். நெல்லின் சுரசுரப்பான பாகங் களில் உராய்ந்து ஊறிய அப்ரகம் எளிதில் வெளி யேறும். பின்னர் சில நாட்கள் தெளிய வைத்துத் தெளிந்த திரவத்தை இறுத்து அடியில் படியும் அப்ரகத்தை மட்டும் வெய்யிலில் உலர்த்திப் பத்திரப் படுத்தவும்.

அதிகமான அளவில் தயாரிக்கும்போது சுத்தி செய்த அப்ரகத்தை கல்லுரலில் நன்கு விழுது போல் அறைத்துக் கரைத்துபன் முறை அலசி, கல், மண் முதலியவற்றை நீக்கித் தெளிய வைத்து தெளிவை நீக்கி அடியில் படியும் அப்ரகத்தை உலர்த்திப் பத்திரப்படுத்தலாம்.

**அப்ரக மாரணம் :**

மேற்கூறிய அப்ரகத்துடன் வங்காரம், வீசம் பங்கு பொடித்துச் சேர்த்து அவற்றை வெள்ளைச் சாட்டரணை வேர் சாறு கொண்டு நன்கு அறைத்து வில்லைகளாகத் தட்டி உலர்ந்த பின் முறைப்படி அகலில் அமைத்துச் சீலமண் பூசி கஜபுடமிடத் தேவையான வரட்டிகளின் அளவில் பாதி உப யோகித்துப் புடமிடவும்.

12.500 கிலோ எடையுள்ள உலர்ந்த வில்லைகளைப் புடமிட 400 நடுத்தரமான வரட்டிகள் போது மானது.

இவ் விதம் திரும்பத்திரும்ப வெள்ளைச் சாட்டரணை வேர்ச்சாறு கொண்டே அறைத்து 10 புடங்களும். அடுத்து ஆடாதோடை இலைச்சாறு கொண்டே அறைத்து 10 புடங்களும், கடைசியாக ஆலம் விழுது கஷாயம் கொண்டே அறைத்து 10 புடங்களும் இடவும். புடங்களின் எண்ணிக்கை நெருங்கி வரும்பொழுதும் பஸ்மத்தின் நிறம் சரியாக அமையா விட்டால் வரட்டிகளின் எண்ணிக்கையை 600 வரை அதிகமாக்கலாம். மேலும் கடைசியாக உள்ள 2–3 புடங்களில் அறைத்த அப்ரக பஸ்மத்தைப் பற்பல சிறிய வில்லைகளாகத் தட்டாது அதிக கனமின்றி அகலமான பெரிய வில்லைகளாகத் தட்டி நன்கு உலர்ந்த பின் அவற்றைத் தனித்தனியே எருக்கன் இலையைச் சுற்றி மூடி அதன் மேல் தனித்தனியே சீலைமண் செய்து உலர்த்தவும். பின்னர் அவற்றை அப்படியே வரட்டிகளுள் அமைத்துப் புடமிடவும்.

எரிபொருளின் வெப்பம், அகல் போன்றவைகளின் தடையின்றி நேரடியாக அம்முறையில் வில்லைகளில் பற்றுவதால் பாகம் விரைவில் ஏற்பட ஏதுவாகிறது.

புடங்களின் எண்ணிக்கையை 3- உடன் வரையறுத்து மேற்கூறிய முறைப்படி தயாரிக்கப் பட்டது குஸ்த் அப்ரக்ஸியா எனப்படும்.

**அளவு:** 100 முதல் 200 மி.கி. வரை 3 வேளை தேனுடன்.

**தீரும் நோய்:** பிரமேஹம், மதுமேஹக் கட்டி கள், அதிமூத்திரம், நாட்பட்ட ஜ்வரம், ரத்தக் குறைவு, பலவீனம், இதயநோய், சுவாஸநாள விரிவு

## 97. குஸ்த்-அப்ரக்-ஸபேத்

1. வெள்ளை அப்ரகம் 125 கிராம்
2. வெடியுப்பு 375 ,,

வெள்ளை அப்ரகத்தகடுகளையும், வெடியுப்பையும் அடுக்கடுக்காக ஓர் அகலில் பரப்பி மற்றோர் அகல் கொண்டு மூடிச்சீலை செய்து 750 வரட்டிகளில் புட மிட்டு ஆறியபின் பற்பமான வெள்ளை அப்ரகத்தைப் பொடித்து ஒரு அகன்ற பாத்திரத்தில் தண்ணீரில் கலந்து அப்ரகம் முழுவதும் அடியில் தங்கின பிறகு, பாத்திரத்தை சாய்த்து எல்லாத் தண்ணீரையும் வெளியகற்றவும். இவ்விதமே 2-3 முறை செய்து பிறகு பாத்திரத்தை ஒரு துணியால் மூடி வெய்யிலில் வைக்கவும். அப்ரகம் நன்முக உலர்ந்த பிறகு ஒரு கல் வத்திலிட்டு நன்முக அரைத்து பத்திரப்படுத்தவும். பற்பத்தில் மினுமினுப்போ, அல்லது கடினத் தன்மையோ தென்பட்டால் இந்த முறையை மறுபடி யும் செய்ய வேண்டும்.

**அளவு:** 100-200 மி.கி. 1 நாளைக்கு 2 வேளை வெண்ணெயுடன்.

**தீரும் நோய்:** மது மேகம், இரைப்பு, பாரிச வாயு.

## 98. குஸ்த் அல்கரன்

**மான் கொம்பு சோதனம் :**

கழுவும் சோடாக் கறைத்த தண்ணீரில் சிறு துண்டுகளாக அறுத்த மான் கொம்புகளைப் போட்டு ஒரு கொதி வரும் அளவு கொதிக்க வைத்துக் கழுவி உலர்த்த மான் கொம்பு சுத்தியாகும்.

**மான் கொம்பு மாரணம் :**

சுத்தி செய்த மான் கொம்புகளை அகலின்றி அவ் விதமே 1000 வரட்டிகளைப் பகிர்ந்து அடுக்கி அதன் மேல் பரப்பி வைத்து மீதமுள்ள வரட்டிகளால் மூடிப் புடமிடவும்.

ஆறியபின் எரிந்த மான் கொம்புகளைப் பொறுக்கி எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து அகத்திக் கீரைச்சாறு கொண்டு நன்கு அறைத்து வில்லை தட்டி உலர்த்தி அகல்களிலிட்டு சீலை மண் பூசி முறைப்படி நடுத்தரமான 1000 வரட்டிகளைக் கொண்டு புடமிட இது வெண்ணிறமான பஸ்மமாகிறது. இது 11.500 கிலோ எடையுள்ள மான் கொம்புகளை பஸ்மமாக்கத் தேவையானது.

பின்னர் அவற்றைப் பொடித்து 100 நெ. சல்லடை வழியே சலித்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 100 முதல் 500 மி.கி. வரை 3 வேளை வெண்ணை அல்லது நெய்யுடன்.

**தீரும் நோய் :** மார்பு வலி, இதயநோய், இருமல், இழைப்பு, பாரிச வாயு, நாட்பட்ட ஜ்வரங்கள், வெள்ளைபடுதல், மூத்ராசயத்தில் வலி, சிரமத்துடன் சிறு நீர் போதல்.

## 99. குஸ்த் போலாத்

| | | |
|---|---|---|
| 1. | அயம் | 100 கிராம் |
| 2. | சோற்றுக் கற்றாழைச்சாறு | 900 மி.லீ. |
| 3. | சோற்றுக்கற்றாழை | 200 கிராம் |

சோற்றுக் கற்றாழைச் செடியை சிறு துண்டுகளாக வெட்டி உரலிலிட்டு நன்றாக விழுது போல் அரைக்கவும். இந்த விழுதை இரண்டு பெரிய வில்லைகளாகச் செய்து, ஒரு வில்லையை அகலில் வைத்து, அதன் மேல் அயத்தை வைத்து, மற்றொரு வில்லையால் அயத்தை மூடி சீலை செய்து, வெய்யிலில் வைக்கவும். பிறகு மற்றொரு அகலை அதன் மேல் மூடி சீலை செய்து 50 வரட்டிகளால் புடமிடவும். சூடு தணிந்த பிறகு வில்லைகளை எடுத்துக் கல்வத்திலிட்டு சோற்றுக் கற்றாழைச் சாற்றை சேர்த்து அரைத்து, வில்லைகள் செய்து உலர்த்தி அகல்களில் வைத்து சீலை செய்து, 50 வரட்டிகளால் புடமிடவும். இதே போல் மூன்று முறைபுடமிட்டு பற்பத்தை நன்றாக அரைத்து பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 100-300 மி.கி. வெண்ணை அல்லது நெய்யுடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்**: சோகையில் மற்றய மருந்துகளுடன் சேர்த்து உபயோகிக்க.

காடியில் 7 நாட்கள் ஊற வைத்து அறைத்தோ அல்லது கற்ருழைச்சாறு கொண்டரைத்து வில்லை தட்டியோ புடமிட்டுத் தயாரிப்பதும் உண்டு.

## 100. குஸ்த் ஹஜரஸ்யஹூத்

| | | |
|---|---|---|
| 1. | ஹஜரல்யஹூத் | 500 கிராம் |
| 2. | வெடியுப்பு | 1000 ,, |
| 3. | முள்ளங்கிச்சாறு | வேண்டிய அளவு |

ஹஜ்ரல்யஹூதை நன்ருகப் பொடித்து வெடியுப் பின் நடுவில் வைத்து, முள்ளங்கிச் சாற்றை மேலே ஊற்றி உலர வைக்கவும். உலர்ந்த பிறகு சீலை செய்து 80 வரட்டியில் புடமிடவும். பின்னர் பொடித்து பத்திரப்படுத்தவும்.

**அளவு**: 100-300 மி.கி. பாலுடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்**: குண்டிக்காயிலும், மூத்திரப் பையிலும் வளரும் கற்கள்.

## 101. குஸ்த் ஜஸ்த்

**ஜஸத சோதனம்**:

துத்தநாகத்தை இரும்புச் சட்டியிலிட்டுத் துருத்தியால் ஊதி உருக்கவும். உருகிய நிலையில் அதைச் சிறு

கரண்டியால் எடுத்துத் தாமதமின்றி பக்கத்தில் தயாராக வைத்துள்ள வேப்பெண்ணெயில் வெடித்துத் தெரிக்காதவாறு பத்திரமாக ஊற்றவும். பின்னர் உறைந்த துத்தநாகத்தை எண்ணெயினின்றும் எடுத்து முன் போல 7 தடவை திரும்பச் செய்ய துத்தநாகம் சுத்தியாகிறது.

**ஜஸதமாரணம் :**

சுத்தி செய்த துத்தநாகத்திற்கு சமன் மஞ்சள் சூர்ணமும் சமன் ஓமமும் எடுத்துக் கொண்டு துத்த நாகத்தை இரும்புச் சட்டியிலிட்டு உருக்கி அத்துடன் மற்ற இரண்டையும் சிறிது சிறிதாகத் தூவி இரும்புக் கரண்டி அல்லது வேப்பங் குச்சியால் கிளறிவரத் துத்தநாகம் தூளாகி சாம்பல் போலாகும். பின்னர் அதை அகலால் மூடி மேலும் தீவிரமான தீயினால் துருத்தியில் வைத்து நன்கு சிவந்து தணல் போல் ஆகும் வரை ஊதி எரித்து ஆற வைக்கவும்.

பின்னர் அதைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாறு கொண்டு நன்கு அறைத்துச் சிறிய வில்லை களாக்கி உலர்த்தவும். பிறகு அவற்றை அகலிலிட்டுச் சீலை செய்து முறைப்படி அமைத்து நடுத்தரமான 100 வரட்டிகளைக் கொண்டு புடமிடவும். இது 6½ கிலோ எடையுள்ள உலர்ந்த வில்லைகளைப் புடமிடத் தேவை யானது.

இவ்விதம் எலுமிச்சம் பழச்சாறு கொண்டே திரும்பத் திரும்ப அறைத்து அவ்வப்போது பஸ்மம் அமையும் நிறத்திற்கேற்ப வரட்டிகளின் எண்ணிக்

கையை 50, 100 என்ற விகிதத்தில் 400 வரை அதிகரித்து மொத்தம் 11 முதல் 13 புடமிடத்துத் துத்தநாகம் சற்றேறக் குறைய கோபி நிறத்தில் பஸ்மமாகிறது.

வெப்பம் போகாத நிலைகளில் வில்லைகள் பச்சை நிறம் கலந்து இருக்கும். ஆகவே அது சமயங்களில் வெப்பத்தின் தரத்தை அதிகரித்தல் நலம். கடைசி நிலைகளில் $6\frac{1}{2}$ கிலோ எடையுள்ள உலர்ந்த வில்லைகள் 750 வரட்டிகளின் வெப்பத்தைக் கூட நல்ல முறையில் பயன் படுத்திக் கொண்டு கோபி நிறத்தில் பஸ்மமாகின்றன. பின்னர் அவற்றைக் கல்வத்திலிட்டுப் பொடித்து 100-ம் நெம்பர் சல்லடைகளின் வழியே சலித்து பத்திரப்படுத்தவும்.

**அளவு** : 100 முதல் 200 மி. கிராம் வரை 2 அல்லது 3 வேளை தேனுடன்.

**தீரும் நோய்** : மண்ணீரல், கல்லீரல் இவைகள் பெருத்தல், பிரமேஹம், உதரம், வயிற்றுப் பூச்சிகள். போக சக்தியைத் தூண்ட, சுக்கிரமேகம், நாட்பட்ட நீர்த்தாரை அழற்சி, சீக்கிரத்தில் இந்திரியம் நழுவுதல், குட்டம்.

## 102. குஸ்த் கலயீ

**வெள்ளீய சோதனம்** :

வெள்ளீயத்தை இரும்புச் சட்டியிலிட்டுத்துருத்தியால் ஊதி உருக்கவும். உருகிய நிலையில் அதைச் சிறு

கரண்டியால் எடுத்துத் தாமதமின்றி பக்கத்தில் சிறிது நவாச்சாரம் பொடித்துச் சேர்த்துத் தயாராக வைத்துள்ள இலுப்பெண்ணெயில் வெடித்துத் தெரிக்காதவாறு பத்திரமாக ஊற்றவும். பின்னர் உறைந்த வெள்ளியத்தை எண்ணெயினின்றும் தனித் தெடுத்து முன்போல 7 தடவை திரும்பத் திரும்பச் செய்ய வெள்ளியம் சுத்தமாகிறது.

**வெள்ளீய மாரணம் :**

சுத்தி செய்த வெள்ளியத்திற்குத் தனித்தனியே சமமாக புளியம் பட்டை, அரசம்பட்டை, நாயுருவி, ஆவாரம்பூ இவைகளை எடுத்துப் பொடித்து வெள்ளீயத்தை இரும்புச் சட்டியிலிட்டுத்துருத்தியால் ஊதி உருக்கி அத்துடன் மற்ற நான்கு சரக்குகளின் பொடியைச் சிறிது சிறிதாகச் சேர்த்து நீளமான ஆலம் விழுதினால் கிளரிவர வெள்ளீயம் தூளாகி சாம்பல் போல் ஆகும். பின்னர் அதை அகலால் மூடித் துருத்தியில் வைத்து நன்கு சிவந்து தணல் போல் ஆகும் வரை ஊதி எரித்து ஆற வைக்கவும்.

பின்னர் அதைக் கல்வத்திலிட்டு அத்துடன் சுத்தி செய்த தாளகம் 700 கிராம் பொடித்துச் சேர்த்துக் கற்றாழைச் சாறு கொண்டு நன்கு அறைத்துச் சிறிய வில்லைகளாக்கி உலர்த்தவும். பின்னர் அவற்றை அகலிலிட்டுச் சீலைமண் பூசி முறைப்படி அமைத்து நடுத்தரமான 150 வரட்டிகளைக் கொண்டு புடமிடவும். இது 11.500 கிலோ எடையுள்ள உலர்ந்த வில்லைகளைப் புடமிடத் தேவையானது.

இவ்விதம் கற்றாழைச் சாறு கொண்டே திரும்பத் திரும்ப அறைத்து வரட்டிகளின் எண்ணிக் கையை 40,50 என பஸ்மம் அடையும் நிறத்திற்கேற்ப 300 வரை அதிகரித்து மொத்தம் 10 புடமிட வெள்ளீயம் வெண்ணிறமான பஸ்மமாகிறது. வரட்டி களைக் குறைத்துத் தயாரிக்க வேண்டிய மருந்துகளில் இதுவும் ஒன்று.

பின்னர் அவற்றைக் கல்வத்திலிட்டுப் பொடித்து 100-ம் நெம்பர் சல்லடையின் வழியே சலித்துபத்திரப் படுத்தவும்.

**அளவு** : 100 முதல் 200 மி. கிராம் வரை 2 வேளை தேனுடன்.

**தீரும் நோய் :** சிரமத்துடன் சிறு நீர் வெளி யேறுதல். பிரமேஹம். பூயமேகம். மற்றும் மூத்தி ராசய சம்பந்தமான ரோகங்கள். இந்திரியப் போக்கு. கனவில் இந்திரியம் போதல்.

## 103. குஸ்த் மர்ஜான்

| | | |
|---|---|---|
| 1. | பவளம் | 1000 கிராம் |
| 2. | கற்கண்டு | 3000 ,, |

கற்கண்டுகளைப் பொடித்துப் பவழத்தையும் கற் கண்டுகளையும் ஒன்றன் மேல் ஒன்றாக அடுத்தடுத்து அடுக்காக ஓர் அகலில் அமைத்து மற்றோர் அகலால் மூடி சீலை செய்து உலர்ந்த பிறகு 1000 வரட்டியில்

புடமிடவும். சூடு தணிந்த பிறகு சீலையைப் பிரித்து பவளத்தை எடுத்துக் கல்வத்திலிட்டு நன்ருக அரைத்து வைக்கவும். நல்ல முறையில் செய்த பற்பம் முத்து போல் வெள்ளையாக இருக்கும்.

**அளவு :** 200-500 மி. கி. பாலுடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** இரைப்பு, நாட்பட்ட இருமல், நாட்பட்ட மந்த ஜுரங்கள், ரத்தம் கக்குதல், சுக்கிர மேகம்.

## 104. குஸ்த் நுக்ரா

1. வெள்ளி ரேக்கு — 180 கிராம்
2. எருக்கன் பால் — வேண்டிய அளவு

வெள்ளி ரேக்குகளை எருக்கன் பாலில் ஊற வைத்துக் கல்வத்திலிட்டு 2 மணி நேரம் நன்ருக அரைத்துச் சிறிய, மெல்லிய வில்லைகளாகச் செய்து வெய்யிலில் உலர்த்தி முறைப்படி சீலை செய்து 150 வரட்டியில் புடமிடவும். இவ் விதம் 5 முதல் 9 புடங்களிட்டு நன்கு பொடித்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 200. மி. கி. வெண்ணெயுடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** பேடித்தன்மை, சுக்கிரமேகம், சீக்கிரத்தில் இந்திரியம் நழுவுதல், கல்லீரல், இருதயம், மூளை இவைகளின் பலவீனம்.

## 105. குஸ்த் திலா

400 கிராம் தங்க ரேக்குகளைக் கல்வத்திலிட்டு அத்துடன் பத்தில் ஒரு பங்கு மஞ்சள் கடம்பு உப்பு சேர்த்து சிகப்பு சிறு அம்மான் பச்சரிசிச் சாற்றால் நன்கு அரைத்துச் சிறு வில்லைகளாக்கி உலர்த்தி அகலி லிட்டுச் சீலை மண் பூசி முறைப்படி நடுத்தரமான 150 வரட்டிகளைக் கொண்டு புடமிடவும்.

ஆறிய பின் முன்போலவே மேலும் ஒரு புடமிட மஞ்சளும், பழுப்பும் கலந்த நிறத்துடன் தளுக்கின்றி தங்கம் பஸ்மமாகும்.

பின்னர் நுண்ணியதாகப் பொடித்து பத்திரப் படுத்தவும்.

**அளவு** : 50 முதல் 100 மி. கி. வரை 2 வேளை தேனுடன்.

**தீரும் நோய்** : இருமல், க்ஷயம், பலவீனம், புணர்ச்சி சக்தியின்மை, மற்றும் புணர்ச்சியைப் பற்றிய கோளாறுகள், விஷங்கள், மார்நோய், பல வீனம் சீழ் மேகத்தால் ஏற்படும் மூட்டுவாயு.

## 106. குஸ்த் போஸ்த் பெய்ஸ் மூர்க்

1. கோழி முட்டை ஓடு — 1400 கிராம்
2. எலுமிச்சம் பழச்சாறு — வேண்டிய அளவு

கோழி முட்டை ஓடுகளைச் சோற்று உப்புக் கலந்த தண்ணீரில் 8-10 மணி நேரம் வைத்து எடுத்து

ஓட்டின் உட்புறத்தில் உள்ள மெல்லிய தோலை முடியு மானவரை நீக்கிவிடவும். பிறகு ஓடுகளை தண்ணீரில் போட்டு நன்ருக நொறுக்கி கலக்க மெல்லிய தோல்த் துண்டுகள் மேலே மிதக்கும். பாத்திரத்தை சாய்த்து தண்ணீருடன் அவற்றை வெளியேற்றவும். இதே போல் ஒவ்வொரு முறையும் புதிய தண்ணீரைச் சேர்த்து ஓட்டின் உட்புறமிருக்கும் தோல் முழுவதும் அகலும் வரை திரும்பத்திரும்பச் செய்து. ஓடுகளை ஒரு தட்டில் வைத்து வெய்யிலில் உலரவைக்கவும். ஓட்டின் மேல் 2 அங்குலம் நிற்கும் வரை எலுமிச்சம் பழச்சாற்றை ஊற்றி வெய்யிலில் வைக்கவும். சாறு உலர்ந்ததும் அதே போல் மூன்று முறை செய்யவும். பிறகு ஓடுகளைக் கல்வத்திலிட்டு வேண்டிய அளவு எலுமிச்சம் பழச்சாற்றைச் சேர்த்து அரைத்து, வில்லை கள் செய்து உலர்த்தி உலர்ந்த வில்லைகளை அகலில் வைத்து முறைப்படி சீலை செய்து 700 வரட்டியில் புடமிடவும். இதே போல் இரண்டு முறை செய்ய வும். நான்காவது புடத்திற்கு இலந்தம் இலைச் சாற்றை அரைப்பதற்கு உபயோகிக்கவும். பற்பம் சரியாக வரவில்லை என்ருல் மறுமுறை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து 2 புடமும். இலந்தம் இலை சாற்றில் அரைத்து 1 புடமுமிடவும். முறைப்படி செய்த பற்பம் பால் போல் வெள்ளையாக இருக்கும்.

**அளவு :** 100-300 மி. கி. பாலுடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** சுக்கிர மேகம், கனவில் இந்திரியம் நழுவுதல்,

# பிரிவு 10

## லபூபாத்

### லபூப் செய்யும் முறை

லபூப் பொதுவாக மாஜூன் போன்றதே. இவ்வகை முறைகளில் உலர்ந்த பழங்களும், பருப்பினங்களும் சேர்க்கப்படுகின்றன. லப் அல்லது மக்ஜ் என்னும் சொல் உலர்ந்த பழங்களின் உண்ணத் தகுந்த பருப்புப் பகுதியை குறிப்பதாகும்.

### 107. லபூப் கபீர்

| | | |
|---|---|---|
| 1. | ஸாலாப் மிஸ்ரி | 30 இராம் |
| 2. | கொப்பரை | 30 ,, |
| 3. | சிட்டுக் குருவி மூளை நன்கு உலர்ந்தது | 30 ,, |
| 4. | கசகசா | 30 ,, |
| 5. | பிஸ்தா பருப்பு | 15 ,, |
| 6. | பாதம் பருப்பு | 15 ,, |
| 7. | பிண்டக் பருப்பு | 15 ,, |
| 8. | ஹப்பதுல் கிஸ்ரா பருப்பு | 15 ,, |
| 9. | அக்ரோட் பருப்பு | 15 , |
| 10. | சல்கோஸா பருப்பு | 15 ,, |

| | | |
|---|---|---|
| 11. | ஹப்புஸ் ஸாலம் பருப்பு | 15 இராம் |
| 12. | மாஹிரூபியா (ஒரு வகை இரா கருவாடு) | 15 ,, |
| 13. | ஷகாகுல் மிஸ்ரி | 15 ,, |
| 14. | சிற்றரத்தை | 15 ,, |
| 15. | பஹ்மன் ஸுர்க் | 15 ,, |
| 16. | பஹ்மன் ஸுபீத் | 15 ,, |
| 17. | தோதரி-ஸுர்க் | 15 ,, |
| 18. | தோதரி-ஸுபீத் | 15 ,, |
| 19. | சுக்கு | 15 ,, |
| 20. | எள்ளு | 15 ,, |
| 21. | லவங்கப்பட்டை | 15 ,, |
| 22. | மாட்டின் ஆண்குறி-நன்கு உலர்ந்தது | 12 ,, |
| 23. | ஸுரஞ்ஜான் | 12 ,, |
| 24. | பூஜிதான் | 12 ,, |
| 25. | உலர்ந்த புதினா | 12 ,, |
| 26. | ஜடாமாஞ்சில் | 9 ,, |
| 27. | கோரைக் கிழங்கு | 9 ,, |
| 28. | லவங்கம் | 9 ,, |
| 29. | வால் மிளகு | 9 ,, |
| 30. | இனிப்பு வெட்பாலை அரிசி | 9 ,, |
| 31. | தருனஜ் அக்ரபீ | 9 ,, |
| 32. | இச்சிலிக் கிழங்கு | 9 ,, |
| 33. | முடக் கொத்தான் விதை | 9 ,, |

| | | |
|---|---|---|
| 34. | மஞ்சள் முள்ளங்கி விதை | 9 கிராம் |
| 35. | முள்ளங்கி விதை | 9 ,, |
| 36. | ஷல்கம் விதை | 9 ,, |
| 37. | வெங்காய விதை | 9 ,, |
| 38. | இஸ்பிஸ்த் விதை | 9 ,, |
| 39. | ஹிலியூன் விதை | 9 ,, |
| 40. | ஜாதிக்காய் | 6 ,, |
| 41. | ஜாதிபத்திரி | 6 ,, |
| 42. | உஷ்ணு | 6 ,, |
| 43. | திப்பிலி | 6 ,, |
| 44. | மாயாஷுத்ரே ஆராபி-நன்கு உலர்ந்தது | 12 ,, |
| 45. | குங்குமப்பூ | 12 ,, |
| 46. | மஸ்தகி | 12 ,, |
| 47. | அகில் கட்டை | 7.50 ,, |
| 48. | அம்பர் | 3.75 ,, |
| 49. | கஸ்தூரி | 1.88 ,, |
| 50. | தங்க ரேக்கு | 30 எண் |
| 51. | வெள்ளி ரேக்கு | 50 ,, |
| 52. | தேன் | 1725 கிராம் |

கொப்பரை, கசகசா, பிஸ்தா முதல், ஹப்புஸ் ஸாலம் இறுதியான பருப்பு வகைகள் ஆகிய சரக்கு களை உரலிலிட்டு நன்ருக விழுதுபோல் அறைத்துத் தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்து காய்ச்சிய பாகத்துடன் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் மற்ற

சரக்குகளின் சூரணங்களையும் சிறிது சிறிதாக சேர்த்து நன்ருகக் கலந்து ஆறியபின் நன்கு பொடித்த குங்குமப்பூ அம்பர், கஸ்தூரி இவற்றையும், ரேக்கு களையும் சேர்த்து நன்கு கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 3—12 கிராம் பசுவின் பாலுடன் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்:** இழந்த வாலிபம் மீள, நாட்பட்ட வியாதிகளின் சிகிச்சைகளினுல் இழந்த ஆரோக்கியத் தைத் திரும்பிப் பெற, நரம்புகளுக்கு வலுவூட்ட, இருதயத் தசைகளின் ஆரோக்கியத்தை நிலைநாட்ட.

## 108. லபூப் ஸகீர்

| | | |
|---|---|---|
| 1. | பாதம் பருப்பு | 10 கிராம் |
| 2. | அக்ரோட் பருப்பு | 10 ,, |
| 3. | சல்கோஸா பருப்பு | 10 ,, |
| 4. | ஹப்புஸ்ஸாலம் பருப்பு | 10 ,, |
| 5. | முடக் கொத்தான் விதை | 10 ,, |
| 6. | ஹப்பதுல் கிஸ்ரா | 10 ,, |
| 7. | பிண்டக் பருப்பு | 10 ,, |
| 8. | பிஸ்தா பருப்பு | 10 ,, |
| 9. | கொப்பரை | 10 ,, |
| 10. | தோதரி-ஸுபீத் | 10 ,, |
| 11. | தோதரி-ஸுர்க் | 10 ,, |

| | | | |
|---|---|---|---|
| 12. | கசகசா | 10 | கிராம் |
| 13. | ஸலீகா | 10 | ,, |
| 14. | எள்ளு | 10 | ,, |
| 15. | பஹ்மன்-ஸுர்க் | 10 | ,, |
| 16. | பஹ்மன் ஸுபீத் | 10 | ,, |
| 17. | சுக்கு | 10 | ,, |
| 18. | திப்பிலி | 10 | ,, |
| 19. | அக்ராகாரம் | 10 | ,, |
| 20. | வால்மிளகு | 10 | ,, |
| 21. | லவங்கப்பட்டை | 10 | ,, |
| 22. | ஷகாகுல் மிஸ்ரி | 10 | ,, |
| 23. | சிற்றரத்தை | 10 | ,, |
| 24. | ஜர்ஜீர் விதை | 10 | ,, |
| 25. | வெங்காய விதை | 10 | ,, |
| 26. | ஷல்கம் விதை | 10 | ,, |
| 27. | இஸ்பிஸ்த் விதை | 10 | ,, |
| 28. | தேன் | 810 | ,, |

1—3, 7—9, 12 சரக்குகளை 300 மி. லி. தண்ணீரில் சேர்த்து 8—10 மணி நேரம் ஊற வைத்து, எடுத்து நன்ருக விழுதுபோல் அரைத்து வைக்கவும். 4—6, 10, 11, 13—21, 23—27 சரக்குகளை நன்ருக பொடித்துக் கொள்ளவும். ஷகாகுல் மிஸ்ரியை 300 மி. லி. தண்ணீருடன் சேர்த்து 8 மணி நேரம் வரை ஊற வைத்துப் பிறகு பாதி அளவு வற்றும் வரைக்காய்ச்சி, நன்ருக அரைத்து வைக்கவும்.

தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சி விழுதுபோல் அரைத்து வைத்த சரக்குகளைச் சேர்த்து மறு முறையும் காய்ச்சிப் பாகு பதத்தில் எல்லா சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** *6—12* கிராம் பாலுடன் *1* நாளைக்கு *2* வேளை.

**தீரும் நோய் :** பேடித்தன்மை, கிழப்பருவத்தில் நரம்புகளுக்கு பல மூட்டவும், போக சக்தியை கிளறவும்.

# பிரிவு 11

## லவூகாத்

லவூக் செய்முறையில் மாஜூனை ஒத்தது. நாவினுல் நக்கிச் சாப்பிடும் பதத்தில் அமைவதால் இதற்கு லவூக் எனப்பெயர். ஷர்பதைக் காட்டிலும் சிறிது தடித்தும், மாஜூனைக் காட்டிலும் சிறிது திரவமாகவும் இது அமையும். பெரும்பாலும் நுரையீரல், தொண்டை போன்ற இடங்களில் இது செயல் படுகிறது.

### 109. லவூக் ஹூல்பா

| | | |
|---|---|---|
| 1. | வெந்தயம் | 35 கிராம் |
| 2. | பாதம் பருப்பு | 35 ,, |
| 3. | சுரைப்பருப்பு | 35 ,, |

| | | | |
|---|---|---|---|
| 4. | அதிமதுரம் | 70 | ,, |
| 5. | நிஷாஸ்தா | 70 | ,, |
| 6. | வேலம் பிசின் | 70 | ,, |
| 7. | சர்க்கரை | 1400 | ,, |

நெ. 4, 6 சரக்குகளை நன்ருக பொடித்து வைக்கவும். 1 முதல் 3 சரக்குகளை உரலிலிட்டு நன்ருக அரைத்து வைக்கவும். சர்க்கரையுடன் வேண்டிய அளவு தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சி விழுது போல் அரைத்து வைத்த சரக்குகளையும். நிஷாஸ்தா வையும் சேர்த்து மறு முறையும் காய்ச்சிப் பாகுபதத்தில் மற்ற சரக்குகளின் சூரணங்களையும் சேர்த்து நன்ருக கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு** : 6–12 கிராம் தகுந்த அனுபானத்துடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்** : நாட்பட்ட இருமல், கோழையை இளக்க, ரத்தக்கசிவை நிறுத்த.

## 110. லஊக் கதான்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆளி விதை | 300 | கிராம் |
| 2. | சர்க்கரை | 300 | ,, |
| 3. | தேன் | 300 | ,, |

ஆளி விதையை சுத்தம் செய்து உரலிலிட்டு. சிறிது தண்ணீர் சேர்த்து நன்ருக விழுது போல் அரைத்துச்சாறு எடுத்து அத்துடன் வேண்டிய அளவு

சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் தேனையும் சேர்த்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் தண்ணீருடன் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** நாட்பட்ட இருமல், கோழையை இளக்க, நாட்பட்ட தொண்டை அழற்சியைப் போக்க.

## 111. லஊக் ஸபிஸ்தான்

| | | |
|---|---|---|
| 1. | ஸபிஸ்தான் | 50 எண் |
| 2. | சீமை இலந்தம் பழம் | 20 ,, |
| 3. | கசகசா தோல் | 24 கிராம் |
| 4. | அதிமதுரம் | 4 ,, |
| 5. | கித்மி விதை | 4 ,, |
| 6. | வெள்ளரி விதை | 4 ,, |
| 7. | பிஹீ பழம் விதை | 3 ,, |
| 8. | கற்கண்டு | 480 ,, |
| 9. | பாதம் பருப்பு | 12 ,, |
| 10. | கசகசா | 12 ,, |
| 11. | அதிமதுரப்பால் | 3 ,, |
| 12. | பாதாம் பசின் | 3 ,, |
| 13. | வேலம் பிசின் | 3 ,, |

முதல் 7 சரக்குகளை 960 மி.லி. தண்ணீரில் சேர்த்துக் கசக்கி 6—8 மணி நேரம் ஊறவைத்து பிசைந்து சாற்றைப் பிழிந்து எடுக்கவும்.

இவ்வாறு பிழிந் தெடுத்த சாற்றில் கற்கண்டைக் கரைத்து உரலிலிட்டு விழுது போல் அரைத்த பாதம் பருப்பு, கசகசா இவற்றையும் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் அதிமதுரப்பால், பிசின்கள் இவற்றின் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 12—24 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** கபம் சிக்கிய நாட்பட்ட இருமல்.

## 112. லஊக் ஸுஆல்

| | | |
|---|---|---|
| 1. | கசகசா தோல் | 6 கிராம் |
| 2. | அங்கூர் திராக்ஷை | 6 ,, |
| 3. | அதிமதுரம் | 6 ,, |
| 4. | கசகசா | 6 ,, |
| 5. | பாதம் பருப்பு | 6 , |
| 6. | கித்மி விதை | 6 ,, |
| 7. | பிஹீ தாஞ | 6 ,, |
| 8. | ஆளி விதை | 6 ,, |
| 9. | பர்ஸியாவஷான் | 6 ,, |
| 10. | சோம்பு | 6 ,, |
| 11. | வேலம் பிசின் | 6 ,, |
| 12. | பாதம் பிசின் | 6 ,, |
| 13. | அத்திப்பழம் | 6 எண் |
| 14. | புதிஞ | 6 கிராம் |

| | | | |
|---|---|---|---|
| 15. | சுரைப்பருப்பு | 6 | கிராம் |
| 16. | குலேஸஃபா | 6 | ,, |
| 17. | வெந்தயம் | 6 | ,, |
| 18. | கற்கண்டு | 120 | ,, |

அங்கூர் திராக்ஷை, பாதம் பருப்பு, அத்திப்பழம், ஆளிவிதை இவற்றை உரலிலிட்டு நன்றாக விழுது போல் அரைத்து வைக்கவும். பிஹீதானவை வேண்டிய அளவு தண்ணீரில் 6—8 மணி நேரம் ஊற வைத்து, அதிலிருந்து வரும் வழ வழப்பான சாற்றைப் பிழிந்து எடுத்து அத்துடன் கற்கண்டைச் சேர்த்துக் கரைத்து அரைத்த விழுதுகளையும் சேர்த்து மறு முறையும் காய்ச்சிப் பாகு பதத்தில் மற்ற சரக்குகளின் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 12—24 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** நாட்பட்ட வறட்டு இருமல்.

# பிரிவு 12

## மாஜூனத்

### மாஜூன் செய்யும் முறை

தேன், கற்கண்டு அல்லது சர்க்கரை இவைகளை பாகு செய்து பதத்தில், நுண்ணியதாகப் பொடித்துச் சலித்த சூரணங்களைச் சேர்த்து மாஜூன் தயாரிக்கப்

படுகிறது. பசை போல் விரல்களால் எடுத்து உட்கொள்ளும்படி இது அமையும். இதில் பெரும்பாலும் சரக்குகளின் எடைக்கு மூன்று மடங்கு சர்க்கரை, அல்லது தேன் சேர்க்கப்படுகிறது.

இம் முறைகளில் அர்க்கம் அல்லது மற்ற திரவங்கள் கூறப்பட்டால், அத்துடன் சர்க்கரையைக் கரைத்து உபயோகிக்க வேண்டும். அவசியமாயின் தண்ணீரையும் சேர்த்துக் கொள்ளலாம். தேனை உபயோகிக்கும்போது, அத்துடன் சிறிது தண்ணீரையும் கலந்து கொதிக்க வைத்தல் வேண்டும். கொதிக்கும் போது மேலே வரும் நுரையை அகற்றிப் பின்பு பதத்திற்கு வருமளவுக்கு எரிக்கவும்.

முரப்பா, பருப்பினங்கள் போன்றவைகளை தனியே கல்வத்தில் விழுதாக அரைத்து நுண்ணியதாக்கிப் பாகுடன் சேர்த்து கொதிக்க வைக்க வேண்டும். பரங்கி சாம்பிராணி சேருமிடத்து அதைத் தனியே பொடித்து சேர்க்க வேண்டும். பெரும்பாலும் மாஜூன் ஆறிய பின்னரே அது சேர்க்கப்படுகிறது.

சூரணங்களை சேர்க்கும்போது சிறிது சிறிதாகச் சேர்த்துக் கலக்க வேண்டும். கனிப்பொருள்களை கூறுமிடத்து அவற்றை தகுந்த அர்க்கங்களுடன் சேர்த்துக் கல்வத்திலிட்டு அரைத்துக் கடைசியில் சேர்க்கவும். வெள்ளி, தங்கம் இவைகளை ரேக்குகளாக்கி மற்ற சரக்குகள் நன்கு கலந்த பின்னர் சேர்த்து ஒன்றுபட கலக்கவும்.

## 113. மாஜூன் அஸாராகி

| | | | |
|---|---|---|---|
| 1. | சுத்தி செய்த எட்டிக் கொட்டை | 60 | கிராம் |
| 2. | குலே கௌஜபான் | 30 | ,, |
| 3. | பாதம் பிசின் | 30 | ,, |
| 4. | கொப்பரை | 30 | ,, |
| 5. | உஸ்தகுத்தூஸ் | 30 | ,, |
| 6. | சல்கோஸா பருப்பு | 30 | ,, |
| 7. | ஷகாகுல் மிஸ்ரி | 20 | ,, |
| 8. | ஏலக்காய் | 20 | ,, |
| 9. | பிஞ்சுக் கடுக்காய் | 20 | ,, |
| 10. | நெல்லிக்காய் | 20 | ,, |
| 11. | சந்தனம் வெள்ளை | 20 | ,, |
| 12. | கிச்சிலிக் கிழங்கு | 20 | ,, |
| 13. | அகில் கட்டை | 10 | ,, |
| 14. | லவங்கம் | 10 | ,, |
| 15. | தேன் | 1050 | ,, |

எட்டிக் கொட்டையை 1200 மி.லி. பாலில் 8 மணி நேரம் ஊரவைத்துப் பாதி வற்றும் வரை காய்ச்சி எட்டிக் கொட்டையினுள்ளிருக்கும் பருப்பை எடுத்து உலரவைத்துப் பொடித்து வைக்கவும். நெ. 4, 6 சரக்குகளை உரலிலிட்டு, வேண்டிய அளவு தண்ணீர் சேர்த்து அரைத்து விழுது செய்து வைக்கவும்.

லவங்கம் இறுதியான மற்ற சரக்குகளை இடித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சி, நெ. 4, 6 சரக்குகளின் விழுதைச் சேர்த்து மறுமுறை காய்ச்சிப் பாகு பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 6-12 கிராம் பாலுடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** நரம்புச் சோர்வு, சோகை. பேடித் தன்மை, பலக்குறைவு.

## 114. மாஜூன் பலாஸிபா

| | | |
|---|---|---|
| 1. | பாபுனவிதை | 5 கிராம் |
| 2. | சுக்கு | 20 ,, |
| 3. | மிளகு | 20 ,, |
| 4. | திப்பலி | 20 ,, |
| 5. | லவங்கப்பட்டை | 20 ,, |
| 6. | நெல்லிக்காய் | 20 ,, |
| 7. | தான்றிக்காய் | 20 ,, |
| 8. | சித்ர மூலம் | 20 ,, |
| 9. | ஜராவந்தே–மிஹ்தராஜ் | 20 ,, |
| 10. | ஸாலாப் மிஸ்ரி | 20 ,, |
| 11. | சல்கோஸா பருப்பு | 20 ,, |

| | | | |
|---|---|---|---|
| 12. | பாபுனு வேர் | 20 | ,, |
| 13. | கொப்பரை | 20 | ,, |
| 14. | பாபுனு பூ | 10 | ,, |
| 15. | அங்கூர் திராக்ஷை | 60 | ,, |
| 16. | தேன் | 945 | ,, |

ஸாலாப்மிஸ்ரி, கொப்பரை, சல்கோஸா நீங்கலாக மற்ற சரக்குகளை நன்றாகப் பொடித்துச் சூரணம் செய்து வைக்கவும். ஸாலாப்மிஸ்ரியை 300 மி.லி. தண்ணீரில் ஊரவைத்துக் காய்ச்சி, விழுது போல் நன்றாக அரைத்து வைக்கவும். நெ. 11, 13, 15 சரக்கு களைத் தனித் தனியே அரைத்துக் கொள்ளவும். அவ்விரு விழுதுகளையும் தேனுடன் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு** : 6–12 கிராம் பாலுடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்** : உடல் உரமாக்கி, மது மேகத்திலும், ரத்தக் கொதிப்பிலும் ஏற்படும் உபத்திரவங்களைத் தடுக்க.

## 115. மாஜூன் தபீதுல் வர்த்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஜடாமாஞ்சில் | 10 | கிராம் |
| 2. | கொம்பரக்கு | 10 | ,, |

| | | | |
|---|---|---|---|
| 3. | சந்தனம் வெள்ளை | 10 | கிராம் |
| 4. | ஸலீகா | 10 | ,, |
| 5. | லவங்கப்பட்டை | 10 | ,, |
| 6. | மூங்கிலுப்பு | 10 | ,, |
| 7. | கோஷ்டம் | 10 | ,, |
| 8. | மஸ்தகி நெ. 1 | 10 | ,, |
| 9. | அஸாரூன் | 10 | ,, |
| 10. | குங்குமப்பூ | 10 | ,, |
| 11. | ரோஜா மொக்கு | 100 | ,, |
| 12. | தேன் | 200 | ,, |

கொம்பரக்கைத் தண்ணீரில் சுத்தம் செய்து, உலர்த்தி இடித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். மற்ற பொடிக்க வேண்டிய சரக்குகளை நன்ருக இடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு** : 6–12 கிராம் தண்ணீருடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்** : கல்லீரல், மண்ணீரல் வீக்கம், காமாலை, ஜலோதரம்.

## 116. மாஜூன் முக்ரிஜை நீதான்

| | | |
|---|---|---|
| 1. | முருக்கன் விதைப் பருப்பு | 30 கிராம் |
| 2. | குல்கந்து | 90 ,, |

முருக்கன் விதைகளை வெந்நீரில் 8 மணி நேரம் ஊரவைத்து, அதன் மேல் தோலை நீக்கிவிட்டு, குல்கந்துடன் சேர்த்து நன்ருக விழுதுபோல் அரைத்து, ஒரு ஜாடியில் அடைத்து வைக்கவும். ஜாடியின் வாயை துணியால் கட்டி தண்ணீர் வற்றும் வரை வெய்யிலில் வைக்கவும்.

**அளவு**: 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை கொடுத்து, 3 நாட்கள் கழித்து பேதிக்குக் கொடுக்கவும்.

**தீரும் நோய்**: குடற் புழுக்கள்.

## 117. மாஜூன் நஜ்ஜா

| | | |
|---|---|---|
| 1. | சூரத் கடுக்காய் தோல் | 50 கிராம் |
| 2. | காபூல் கடுக்காய் தோல் | 50 ,, |
| 3. | பிஞ்சுக் கடுக்காய் | 50 ,, |
| 4. | தான்றிக்காய் தோல் | 50 ,, |
| 5. | நெல்லிக்காய் | 50 ,, |
| 6. | பிஸ்பாஏஜ் | 25 ,, |
| 7. | அப்திமூன் | 25 ,, |
| 8. | உஸ்தகுத்தூஸ் | 25 ,, |
| 9. | சிவதை வேர் | 25 ,, |
| 10. | தேன் | 1050 , |

முதல் 9 சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் சூரணத்தைச் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 6 –12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** நாட்பட்ட தலைவலி, காக்கை வலி, சித்தப் பிரமை, மன உளைச்சல், மற்றும் கபத்தினுலும் பித்தத்தினுலும் ஏற்படும் மூளைக் கோளாறுகள்.

## 118. மாஜூன் ஸங்கதாரு முர்க்

| | | |
|---|---|---|
| 1. | கோழி கல்பைதோல் | 7.5 கிராம் |
| 2. | மூங்கிலுப்பு | 7.5 ,, |
| 3. | புதினு | 5 ,, |
| 4. | போஸ்தே பெய்ரூன் பிஸ்தா | 5 ,, |
| 5. | துருஞ்சிக்காய்த் தோல் | 5 ,, |
| 6. | சூரத் கடுக்காய்த் தோல் | 5 ,, |
| 7. | ரோஜா மொக்கு | 10 ,, |
| 8. | பஹ்மன் ஸுபீத் | 7.5 ,, |
| 9. | பஹ்மன் ஸுர்க் | 7.5 ,, |
| 10. | சந்தனம் வெள்ளை | 7.5 ,, |
| 11. | சந்தனம் சிவப்பு | 7.5 ,, |
| 12. | சதாவர் பார்ஸி | 7.5 ,, |
| 13. | தனியா | 7.5 ,, |
| 14. | ஹப்புல்லாஸ் | 7.5 ,, |
| 15. | தேன் | 300 ,, |

முதல் 2 சரக்குகளைக் கல்வத்திலிட்டு நன்றாக அரைத்து மெல்லிய சல்லடையில் சலித்து வைக்கவும். மற்ற சரக்குகளைத் தனியே பொடித்துச் சலித்து சூரணமாகச் செய்து வைக்கவும். தேனுடன் சிறிது தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் எல்லாச் சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 3—6 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** கிராணீ, உஷ்ணம் அதிகரித்த நிலையில் ஏற்படும் கல்லீரல் கோளாறுகள்.

## 119. மாஜூன் ஸுபாரிபாக்

| | | |
|---|---|---|
| 1. | மஞ்ஜிஷ்டி | 12.5 கிராம் |
| 2. | கொட்டைப்பாக்கு | 25 ,, |
| 3. | உலர்ந்தபேரீச்சங்காய் | 25 ,, |
| 4. | பால் | 300 மி.லி. |
| 5. | வேலம்பிசின் | 25 கிராம் |
| 6. | நிஷாஸ்தா | 25 ,, |
| 7. | பாதம்பருப்பு | 50 ,, |
| 8. | நல்லெண்ணெய் | 150 மி. லி. |
| 9. | சர்க்கரை | 750 கிராம் |
| 10. | நெரிஞ்சில் | 50 ,, |
| 11. | சீனிபிசின் | 25 ,, |
| 12. | கொப்பரை | 25 ,, |

| | | |
|---|---|---|
| 13. | ஸாலாப்மிஸ்ரி | 5 கிராம் |
| 14. | லவங்கப்படை | 5 ,, |
| 15. | லவங்கம் | 5 ,, |
| 16. | சிறுஏலக்காய் | 5 ,, |
| 17. | சுக்கு | 5 ,, |
| 18. | பிஸ்தாப்பூ | 2.5 ,, |
| 19. | பாக்குப்பூ | 2.5 ,, |
| 20. | ஜாதிக்காய் | 5 ,, |
| 21. | மந்தாரைப்பட்டை | 2.5 ,, |
| 22. | கருவேலம்பட்டை | 2.5 ,, |
| 23. | சங்கபுஷ்பீ | 2.5 ,, |
| 24. | குங்குமப்பூ | 2.5 ,, |
| 25. | கஸ்தூரி | 1.25 ,, |

நெ. 3, 13 இரண்டு சரக்குகளையும் பாலுடன் சேர்த்துக் காய்ச்சி எடுத்து விழுது போல் அரைத்து வைக்கவும். நெ. 7, 12 சரக்குகளையும் அரைத்துக் கொள்ளவும். மற்ற சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்துக் கொள்ளவும். சர்க்கரையை வேண்டிய அளவு தண்ணீருடன் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டிய பிறகு, நெ. 3, 13, 7, 12 சரக்குகளின் விழுதைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகத்தில் எல்லாச் சூரணங்களை யும், நல்லெண்ணெய்யையும் சேர்த்து நன்ருகக் கலந்து ஆறிய பின்னர் கஸ்தூரியையும், குங்குமப் பூவையும் அரைத்துச் சேர்த்து பத்திரப்படுத்தவும்.

**அளவு** : 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** குடல் கிரந்திகளிலிருந்து சுரக்கும் திரவத்தைத் தடிப்பாக்க, பெண்களுக்கு வெள்ளை படுதல், பலவீனம்.

## 120. மாஜூன் ஸூரன்ஜான்

| | | |
|---|---|---|
| 1. | ஸூரஞ்ஜான் ஷீரீன் | 30 கிராம் |
| 2. | மஸ்தகி நெ. 1 | 15 ,, |
| 3. | குல்கந்து | 120 ,, |
| 4. | நிலாவாரை | 30 ,, |

மஸ்தகியைக் கல்வத்திலிட்டு லேசாக அரைக்கவும். மற்ற சரக்குகளை நன்றாகப் பொடித்துக் கொள்ளவும். குல்கந்தை உரலிலிட்டு சூரணங்களையும் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாக அரைத்து பத்திரப்படுத்தவும்.

**அளவு.** 3-6 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** ஆமவாத ஜூரம், பூட்டுகளில் வலி, வீக்கம், மற்றும் கபத்தினால் ஏற்படும் எல்லாவித வியாதிகளும்.

## 121. மாஜூன் உஷ்பா

| | | |
|---|---|---|
| 1. | சோம்பு | 20 கிராம் |
| 2. | சந்தனம் வெள்ளை | 20 ,, |
| 3. | பிஸ்பாயேஜ் | 60 ,, |

| | | |
|---|---|---|
| 4. | நிலாவாரை | 60 கிராம் |
| 5. | நன்னாரி | 160 ,, |
| 6. | தேன் | 240 ,, |
| 7. | கற்கண்டு | 480 ,, |

நிலாவரையைச் சுத்தம் செய்து முதல் 5 சரக்குகளை ஒன்றாகச் சூரணம் செய்து கொள்ளவும். தேன், கற்கண்டு இவற்றுடன் வேண்டிய அளவு தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் எல்லாச் சூரணங்களையும் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு**: 6—12 கிராம். 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்**: எல்லாவித சருமக் கோளாறுகளிலும் ரத்த சுத்தி செய்ய.

## 122. மாஜூன் ஜீக்

| | | |
|---|---|---|
| 1. | தேத்தான் கொட்டை | 150 கிராம் |
| 2. | தேன் | 450 ,, |

தேத்தான் கொட்டையை இரும்பு பாணலியில் விட்டு நன்றாக வறுத்து உரலிலிட்டு தேனுடன் சேர்த்து நன்றாக அரைத்துக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு**: 6—12 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

தீரும் நோய் : கக்குவான் இருமல், சுவாச நாளத்தின் அழற்சியால் ஏற்படும் இரைப்பு. அடிக்கடி வரும் இருமல்.

## 123. மாஜூன் ஸுர்பா

| | | | |
|---|---|---|---|
| 1. | அங்கூர் திராக்ஷை | 80 | கிராம் |
| 2. | அதிமதுரம் | 80 | ,, |
| 3. | காபூல் கடுக்காய் தோல் | 7 | ,, |
| 4. | சூரத் கடுக்காய் தோல் | 7 | ,, |
| 5. | லவங்கப்பட்டை | 7 | ,, |
| 6. | லவங்கம் | 7 | ,, |
| 7. | ஜாதிக்காய் | 7 | ,, |
| 8. | கிச்சிலிக் கிழங்கு | 3.5 | ,, |
| 9. | சோம்பு | 3.5 | ,, |
| 10. | நெல்லிக்காய் | 7 | ,, |
| 11. | அனிஸூன் ஓமம் | 27.5 | ,, |
| 12. | சர்க்கரை | 320 | ,, |

அங்கூர் திராக்ஷை, அதிமதுரம் நீங்கலாக மற்ற சரக்குகளைப் பொடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். அதிமதுரத்தை வேண்டிய அளவு தண்ணீருடன் சேர்த்து 8 மணி நேரம் ஊற வைத்துப் பிறகு பாதி அளவு வற்றும் வரை காய்ச்சி, வடிகட்டிய கஷாயத்தில் சர்க்கரையை சேர்த்துக் காய்ச்சி விதை எடுத்த அங்கூர் திராக்ஷையை அரைத்து அவ்விழுதையும் சேர்த்து மறுமுறையும்

காய்ச்சிப் பாகு பதத்தில் சூர்ணத்தைச் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 6–12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** இருமல்.

## 124. மாஜூன் ஸரௌனி

| | | | |
|---|---|---|---|
| 1. | சுக்கு | 7 | கிராம் |
| 2. | மிளகு | 7 | ,, |
| 3. | திப்பிலி | 7 | ,, |
| 4. | பருப்புக்கீரை விதை | 7 | ,, |
| 5. | லவங்கப்பட்டை | 7 | ,, |
| 6. | லவங்கம் | 7 | ,, |
| 7. | சித்தரத்தை | 7 | ,, |
| 8. | தோதரி ஸுர்க் | 7 | ,, |
| 9. | தோதரி ஸுபீத் | 20 | ,, |
| 10. | பஹ்மன் ஸுர்க் | 20 | ,, |
| 11. | பஹ்மன் ஸுபீத் | 20 | ,, |
| 12. | வெட்பாலை அரிசி | 20 | ,, |
| 13. | இனிப்புக் கோஷ்டம் | 20 | ,, |
| 14. | கோரைக் கிழங்கு | 20 | ,, |
| 15. | ஜடாமாஞ்சில் | 20 | ,, |
| 16. | தேன் | 600 | ,, |

முதல் 15 சரக்குகளை நன்றாகப் பொடித்துச் சலித்துச் சூரணமாகச் செய்து வைக்கவும். தேனுடன் சிறிதளவு தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் சூரணத்தைச் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்றாகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6–12 கிராம் தண்ணீருடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** குண்டிக்காய் கோளாறுல் ஏற்படும்வலி, கல்லடைப்பு.

## 125. மாஜூன் ஸபீப்

| | | | |
|---|---|---|---|
| 1. | காபூல் கடுக்காய்த் தோல் | 30 | கிராம் |
| 2. | சூரத் கடுக்காய்த் தோல் | 30 | ,, |
| 3. | தான்றிக்காய்த் தோல் | 30 | ,, |
| 4. | நெல்லிக்காய்த் தோல் | 30 | ,, |
| 5. | உஸ்தகுத்தூஸ் | 30 | ,, |
| 6. | ஊதே ஸலீப் | 15 | ,, |
| 7. | அக்ராகாரம் | 15 | ,, |
| 8. | அங்கூர் திராக்ஷை | 200 | ,, |
| 9. | சர்க்கரை | 200 | ,, |

முதல் 7 சரக்குகளை நன்றாகப் பொடித்துச் சலித்து வைக்கவும். சர்க்கரையை வேண்டிய அளவு தண்ணீருடன் சேர்த்துக்காய்ச்சி விதை எடுத்து உரலிலிட்டு அரைத்த அங்கூர் திராக்ஷையின் விழுதை

யும் பாகத்துடன் சேர்த்து மீண்டும் காய்ச்சிப் பதத்தில் சூரணத்தைச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு:** 6—12 கிராம் தண்ணீருடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** பசியைத் தூண்ட, வயிற்றுக் கோளாறுகள்.

## 126. மாஜூன் ஸூபா

| | | |
|---|---|---|
| 1. ஷாஜீரா | 14 | கிராம் |
| 2. மிளகு | 14 | ,, |
| 3. கசப்புபாதம் பருப்பு | 22 | ,, |
| 4. ஜராவந்தே-மிஹ்தராஜ் | 22 | ,, |
| 5. துக்மே அஞ்ஜரா | 22 | ,, |
| 6. அதிமதுரப் பால் | 45 | ,, |
| 7. குலே ஜூபா | 45 | ,, |
| 8. பர்ஸியாவஷான் | 45 | ,, |
| 9. சர்க்கரை | 687 | ,, |

பாதம் பருப்பு, அதிமதுரப்பால் நீங்கலாக மற்ற சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்து வைக்கவும். பாதம் பருப்பை விழுதுபோலும் அதிமதுரப் பாலை லேசாகவும் தனித் தனியே அரைத்துவைக்கவும். தேனுடன் சிறிதளவு தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகத்தில் சூரணத்தைச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** 3—6 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** ஜலதோஷம், இருமல், சுவாசநாள அழற்சி, சுவாசநாளம் விரிதல், நாட்பட்ட தலைவலி, கபத்தினல் ஏற்படும் மற்ற வியாதிகள்.

# பிரிவு 13

## முபர்ரஹாத்

### முபர்ரா செய்யும் முறை

மாஜூன் செய்யும் முறைப்படி இது தயாரிக்கப் படுகிறது. மயக்கத்தக்கது அல்லது தூக்கத்தை உண்டு பண்ணுவது போன்ற சரக்குகளின் உதவி யின்றி இம்முறை மனிதனுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பதால் இவைகள் இப்பெயர் பெற்றிருக் கின்றன.

### 127. முபர்ரே அஹ்மதீ

| | | |
|---|---|---|
| 1. | மூங்கிலுப்பு | 20 கிராம் |
| 2. | சந்தனம் வெள்ளை | 40 ,, |
| 3. | நெல்லிக்காய் | 40 ,, |
| 4. | ரோஜா மொக்கு | 80 ,, |
| 5. | தனியா | 80 ,, |
| 6. | சர்க்கரை | 800 ,, |

மூங்கிலுப்பைத் தனியாகவும் மற்ற சரக்குகளைத் தனியாகவும் பொடித்துச் சல்லித்து வைக்கவும். சர்க்கரையை வேண்டிய அளவு தண்ணீருடன் சேர்த்துக் காய்ச்சிப் பாகத்தில் சூரணங்களைச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு**: *12—24 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.*

**தீரும் நோய்**: வயிற்று ரணம், பொதுவாகக் குளிர்ச்சி உண்டாக்க.

## 128. முபர்ரே ஆஸம் பாஜவாஹிர்

| | | |
|---|---|---|
| 1. | பட்டு கூண்டு–சுத்தி செய்தது | 24 கிராம் |
| 2. | கௌஸபான் | 24 ,, |
| 3. | பாதரன்ஜ்போயா | 31.5 ,, |
| 4. | ஜரிஷ்க் | 18 ,, |
| 5. | பன்னீர் | 225 மி.லி. |
| 6. | மாதுளம்பழச்சாறு | 225 ,, |
| 7. | கௌஸபான் அர்க்கம் | 225 ,, |
| 8. | சந்தன அர்க்கம் | 225 ,, |
| 9. | பிஹீமுரப்பா | 225 கிராம் |
| 10. | குங்குமப்பூ | 4.5 ,, |
| 11. | சர்க்கரை | 225 ,, |
| 12. | தேன் | 4269 ,, |
| 13. | பஹ்மன் ஸுபீத் | 4.5 ,, |
| 14. | ,, ஸுர்க் | 4.5 ,, |

| | | |
|---|---|---|
| 15. | ஜடாமாம்ஸி | 4.5 கிராம் |
| 16. | பருப்புக் கீரை விதை | 4.5 ,, |
| 17. | பேரேலம் | 4.5 ,, |
| 18. | சிற்றேலம் | 4.5 ,, |
| 19. | காவிக்கல் | 4.5 ,, |
| 20. | கிலே மக்தூம் | 4.5 ,, |
| 21. | ஜத்வார்கதாயீ | 4.5 ,, |
| 22. | வால் மிளகு | 22.5 ,, |
| 23. | சிறு நாகப்பூ | 22.5 ,, |
| 24. | தருனஜ் அக்ரபி | 22.5 ,, |
| 25. | கிச்சிலிக்கிழங்கு | 22.5 ,, |
| 26. | சந்தனம் வெள்ளை | 22.5 ,, |
| 27. | ,, சிகப்பு | 22.5 ,, |
| 28. | தனியா | 22.5 ,, |
| 29. | சுக்கு | 18 ,, |
| 30. | லவங்கப்பத்திரி | 18 ,, |
| 31. | கோரைக்கிழங்கு | 18 ,, |
| 32. | ஸகாகுல்மிஸ்ரி | 18 ,, |
| 33. | தாமரைப்பூ | 18 ,, |
| 34. | துருஞ்சித்தோல் | 24 ,, |
| 35. | மூங்கிலுப்பு | 24 ,, |
| 36. | யஷப் | 22.5 ,, |
| 37. | கஹ்ரூபா | 22.5 ,, |
| 38. | ஜஹர்மோஹ்ரா | 22.5 ,, |
| 39. | மாணிக்கம் | 2.25 ,, |

| | | |
|---|---|---|
| 40. | புஷ்பராகம் | 22.5 கிராம் |
| 41. | அம்பர் | 22.5 ,, |
| 42. | கஸ்தூரி | 9 ,, |
| 43. | தங்கரேக்கு | 4.5 ,, |
| 44. | வெள்ளி ரேக்கு | 4.5 ,, |

முதல் மூன்று சரக்குகளை வேண்டிய அளவு தண்ணீரில் கொதிக்க வைத்து வடிக்கட்டிய கஷாயத்துடன் தனியே அரைத்து வடிகட்டிய ஜரிஷ்க், பன்னீர், மாதுளம்பழச்சாறு, அர்க்கங்கள், நன்கு அரைத்த பிஹீமுரப்பா, குங்குமப்பூ தேன், சர்க்கரை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் மூங்கிலுப்பு வரையிலான சரக்குகளின் நுண்ணிய சூரணத்தைச் சேர்த்து ஆறியபின்னர் போதுமான அளவு பன்னீர் சேர்த்தரைத்து உலர்த்திப் பொடித்த யஷப், கஹ்ருபா, ஜஹர்மோஹ்ரா, மாணிக்கம், புஷ்பராகம் இவற்றையும், தனியே பொடித்த அம்பர், கஸ்தூரி இவற்றையும், ரேக்கு வகைகளையும் நன்கு கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 3—6 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** நரம்புத் தளர்ச்சி, இருதயத்தசைச் சிதைவு, உடல் உரமாக்கி.

## 129. முபர்ரே ஆஸம் ஸாதா

| | | |
|---|---|---|
| 1. | பஹ்மன் ஸுபீத் | 5 கிராம் |
| 2. | பஹ்மன் ஸுர்க் | 5 ,, |

| | | |
|---|---|---|
| 3. | ஜடாமாஞ்சில் | 5 கிராம் |
| 4. | பருப்புக்கீரை விதை | 5 ,, |
| 5. | பேரேலம் | 5 ,, |
| 6. | சிற்றேலம் | 5 ,, |
| 7. | காவிக்கல் | 5 , |
| 8. | கிலே-மக்தும் | 5 ,, |
| 9. | குங்குமப்பூ | 5 ,, |
| 10. | ஜத்வார் கதாயி | 5 ,, |
| 11. | கஹ்ருபா | 15 ,, |
| 12. | வால் மிளகு | 15 ,, |
| 13. | சிறுநாகப்பூ | 15 ,, |
| 14. | தருனஜ் அக்ரபி | 15 ,, |
| 15. | கிச்சிலிக்கிழங்கு | 15 ,, |
| 16. | சந்தனம் வெள்ளை | 15 ,, |
| 17. | சந்தனம் சிவப்பு | 15 ,, |
| 18. | தனியா | 15 ,, |
| 19. | பாத்ஜஹர்ஹைவானி | 15 ,, |
| 20. | சுக்கு | 20 ,, |
| 21. | ஜரிஷ்க் | 20 ,, |
| 22. | லவங்கபத்திரி | 20 ,, |
| 23. | கோரைக்கிழங்கு | 20 ,, |
| 24. | ஸகாகுல்மிஸ்ரி | 20 ,, |
| 25. | தாமரைப்பூ | 20 ,, |
| 26. | கௌஸபான் | 30 ,, |
| 27. | சூரத் கடுக்காய்த்தோல் | 30 ,, |

| | | |
|---|---|---|
| 28. | துருஞ்சிக்காய்த் தோல் | 30 கிராம் |
| 29. | மூங்கிலுப்பு | 30 ,, |
| 30. | பட்டு கூண்டு-சுத்தி செய்தது | 30 ,, |
| 31. | பாதரன்ஜ் போயா | 30 ,, |
| 32. | பிஹீப்பழச் சாறு | 250 மி. லி. |
| 33. | மாதுளம்பழச் சாறு | 250 ,, |
| 34. | பன்னீர் | 250 ,, |
| 35. | அர்கேகௌஸபான் | 250 ,, |
| 36. | சந்தன அர்க்கம் | 250 ,, |
| 37. | கற்கண்டு (அல்லது) தேன் | 3470 கிராம் |

ஜத்வார் கதாயி, கஹ்ருபா, மூங்கிலுப்பு, இவற்றைக் கல்வத்திலிட்டுப் பன்னீரைச் சேர்த்து அரைத்து உலர வைக்கவும். பொடிக்க வேண்டியமற்ற சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சல்லித்து வைக்கவும். பட்டுக் கூண்டு, பாதரன்ஜ்போயா இவற்றை அர்க்கங்களில் 8 மணி நேரம் ஊரவைத்துப் பிறகு காய்ச்சி வடிகட்டிய கஷாயத்தில் சாறுகள், கற்கண்டு, அரைத்த குங்குமப்பூ விழுது இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகத்தில் மற்ற சரக்குகளின் சூரணங்களையும் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு** : 6–12 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்** : கல்லீரல், இருதயம், மூளை இவைகளுக்கு பலத்தை அளிக்க, இருதய தசைச் சிதைவு.

## 130. முபர்ரே பரீத்ஸாதா

| | | | |
|---|---|---|---|
| 1. | குலே கௌஸபான் | 9 | கிராம் |
| 2. | மூங்கிலுப்பு | 9 | ,, |
| 3. | சந்தனம் வெள்ளை | 9 | ,, |
| 4. | ரோஜாமொக்கு | 9 | ,, |
| 5. | சுரைவிதைப் பருப்பு | 9 | ,, |
| 6. | பருப்புக்கீரை விதை | 9 | ,, |
| 7. | ஆப்பிள் முரப்பா | 90 | ,, |
| 8. | பிஹீ முரப்பா | 90 | ,, |
| 9. | பன்னீர் | 112.500 | மி.லி. |
| 10. | அர்க் பேத்மிஸ்க் | 112.500 | ,, |
| 11. | சர்க்கரை | 540 | கிராம் |

அர்க்கங்களுடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சி அத்துடன் நன்கு அரைத்த முரப்பாக்களையும் கலந்து மீண்டும் கொதிக்க வைத்துப் பாகத்தில் மற்ற சரக்குகளின் நுண்ணிய சூரணத்தைக் கலந்து பத்திரப் படுத்தவும்.

**அளவு :** 3—6 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** நல்ல குளிர்ச்சியான உரமாக்கி, நரம்புகளைக் குளுமைப்படுத்த.

## 131. முபர்ரே தில்குஷா

| | | |
|---|---|---|
| 1. | பாதரன்ஜ் போயா | 10.5 கிராம் |
| 2. | துருஞ்சித் தோல் | 10.5 ,, |
| 3. | போஸ்த் பெய்ரூன் பிஸ்தா | 10.5 ,, |
| 4. | சந்தனம் வெள்ளை | 10.5 , |
| 5. | , சிவப்பு | 10.5 , |
| 6. | ரோஜா மொக்கு | 10.5 ,, |
| 7. | அக்மே பரன்ஜ் மிஸ்க் | 10.5 ,, |
| 8. | துரிஞ்சி ஷர்பத் | 480 ,, |
| 9. | ஆப்பிள் முரப்பா | 180 ,, |
| 10. | பிஹீ முரப்பா | 90 ,, |
| 11. | குங்குமப்பூ | 312 மி. கி. |
| 12. | தரூனஜ் அக்ரபி | 2 கிராம் |
| 13. | அகரு | 4 ,, |
| 14. | கிச்சலிக் கிழங்கு | $1\frac{1}{2}$ ,, |
| 15. | லவங்கம் | $3\frac{1}{2}$ ,, |
| 16. | வால் மிளகு | $3\frac{1}{2}$ ,, |
| 17. | பஹ்மன் ஸுர்க் | $3\frac{1}{2}$ ,, |
| 18. | லவங்கப்பட்டை | $3\frac{1}{2}$ ,, |
| 19. | லவங்கப் பத்திரி | $3\frac{1}{2}$ ,, |
| 20. | பஹ்மன் ஸுபித் | 7 ,, |
| 21. | தனியா | 7 , |
| 22. | காவிக்கல் | 7 ,, |
| 23 | மூங்கிலுப்பு | 7 ,, |

| | | |
|---|---|---|
| 24. | குலேகௌஸபான் | 17½ கிராம் |
| 25. | நெல்லிக்காய் | 17½ ,, |
| 26. | ஜரிஷ்க் | 35 ,, |
| 27. | அம்பர் | 2 ,, |
| 28. | பச்சைக் கற்பூரம் | 1½ ,, |
| 29. | வெள்ளிரேக்கு | 2 ,, |
| 30. | கஸ்தூரி | 688 மி. கி. |
| 31. | கஹ்ருபா | 3½ கிராம் |
| 32. | யஷப் | 3½ ,, |
| 33. | பவழப்புத்து | 4½ ,, |

துக்மே பரன்ஜ் மிஸ்க் இறுதியான 7 சரக்குகளை சுத்தமான தண்ணீரில் ஓர் இரவு ஊற வைத்து மறு நாள் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் பிஹீ முரப்பா வரையிலான 3 சரக்குகளையும், குங்குமப் பூவையும் அரைத்துச் சேர்த்துப் பாகத்தில் ஜரிஷ்க் வரையிலான மற்ற சரக்குகளின் நுண்ணிய சூரணம், போதுமான அளவுபன்னீர் கொண்டு நன்கு அரைத்து உலர்த்திப் பொடித்த கஹ்ருபா, யஷப், பவழப்புத்து ஆகியவற்றை நன்கு சேர்த்து அக் கலவை ஆறிய பின்னர் தனியே பொடித்த அம்பர், கஸ்தூரி, பச்சைக் கற்பூரம் ஆகியவற்றையும், வெள்ளிரேக்கையும் நன்கு கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 6—12 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் .** நரம்புச் சோர்வு, பலவீனம்,

# பிரிவு 14

## மர்ஹம் (மேல் பூச்சு மருந்து)

### மர்ஹம் செய்யும் முறை

கொழுப்பு அல்லது எண்ணெய் வகைகளுடன் மற்ற சரக்குகளைச் சேர்த்து வெளி உபயோகத்திற்காக தயாரிக்கப்படுவது மர்ஹம் எனப்படும். இதில் பங்கு கொள்ளும் சரக்குகளை நன்கு நுண்ணியதாகப் பொடித்துச் சலித்துச் சேர்க்க வேண்டும்.

### 132. மர்ஹம் தகிலியூன்

| | | |
|---|---|---|
| 1. | சுத்தி செய்த மிருதார் சிருங்கி | 60 கிராம் |
| 2. | ஆலிவ் எண்ணெய் | 120 ,, |
| 3. | கித்மி விதை | 20 ,, |
| 4. | இஸப் கோல் | 20 ,, |
| 5. | தொக்மே-மாரு | 20 ,, |
| 6. | வெந்தயம் | 20 ,, |
| 7. | ஆளிவிதை | 20 ,, |

மிருதார்சிருங்கியை நன்ருகக் கல்வத்தில் அரைத்து மெல்லிய பொடியாக செய்து அத்துடன் ஆலிவ் எண்ணெயைக் கலந்து சூடாக்கவும். நெ. 3—7 சரக்குகளை 1200 மி.லி. தண்ணீரில் 8 மணி நேரம்

ஊற வைத்துப் பிறகு அரைத்து சாற்றை எடுத்து தண்ணீர் எல்லாம் வற்றும் வரை காய்ச்சிய குழம்பில் மேற்கூறிய கலவையைச் சேர்த்து நன்ருகக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு:** வேண்டிய அளவு மேல் பூச்சு.

**தீரும் நோய்:** குதபாகத்திலும். அதற்கு மேலே யும் ஆருத நாட்பட்ட புண்கள்.

## 133. மர்ஹம் காபூர்

| | | |
|---|---|---|
| 1. | ஸுபிதா (white lead) | 40 கிராம் |
| 2. | தேங்காய் எண்ணெய் | 40 ,, |
| 3. | வெள்ளை மெழுகு | 40 ,, |
| 4. | கோழி முட்டை ஓடு | 40 ,, |
| 5. | கற்பூரம் | 10 ,, |

தேங்காய் எண்ணெயுடன் வெள்ளை மெழுகைச் சேர்த்து உருக்கி மெழுகு உருகியவுடன் வடிகட்டி அத்துடன் கற்பூரம், ஸுபிதா, நன்கு பொடித்துச் சலித்த முட்டை ஓடு இவற்றை நன்கு கலந்து கெட்டியான பின் பத்திரப்படுத்தவும்.

**அளவு:** போதுமான அளவு துணியில் தடவி மேலே பூசவும்.

**தீரும் நோய்:** நாட்பட்ட புண், படை, பாலுண்ணி முதலியன.

## 134. மர்ஹம்—ரால்

| | | |
|---|---|---|
| 1. | பச்சைக் கற்பூரம் | 20 கிராம் |
| 2. | குங்கிலியம் | 20 ,, |
| 3. | கத்தைக்காம்பு | 20 ,, |
| 4. | வெள்ளை மெழுகு | 20 ,, |
| 5. | நெய் | 80 ,, |

கத்தைக்காம்பை நன்ருக அரைத்து மெல்லிய தூளாகச் செய்து வைக்கவும். நெய்யை நன்ருகக் காய்ச்சி, அத்துடன் மெழுகு, குங்கிலியம், இவைகளைச் சேர்த்து ஆறிய பிறகு பச்சைக் கற்பூரத்தைக் கலந்து வைக்கவும்.

**அளவு :** போதுமான அளவு மெல்லிய துணியில் தடவிமேலே போடவும்.

**தீரும் நோய் :** ரணத்தை சுத்தம் செய்ய, சுத்த மான தசையை வளரவைக்க.

## 135. மர்ஹம்—ஸீமாப்

| | | |
|---|---|---|
| 1. | வங்கச் சிந்தூரம் | 2 கிராம் |
| 2. | மிருதார் சிருங்கி | 2 ,, |
| 3. | ரஸம் | 2 ,, |
| 4. | ரசகற்பூரம் | 11 ,, |
| 5. | ஸுபீதா (white lead) | 11 ,, |
| 6. | கத்தைக்காம்பு | 11 ,, |
| 7. | மயில் துத்தம் | 4 ,, |
| 8. | வெண்ணை | 100 ,, |

முதல் 7 சரக்குகளுள் பொடிக்க வேண்டிய வற்றைத் தனித்தனியே கல்வத்திலிட்டு நன்ருக அரைத்துப் பொடித்துப் பிறகு ஒன்ருகச் சேர்த்து மெல்லிய தூளாக அரைத்துப் பிறகு வெண்ணையைச் சேர்த்து நன்ருக கலந்து வைக்கவும்.

**அளவு:** வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் ரோய்:** நாட்பட்ட புண்களை ஆற்ற.

# பிரிவு 15

## ஸனூன்

### பற்பொடி

### 136. மஞ்ஜன் ஸுர்க்

| | | |
|---|---|---|
| 1. | புகையிலை | 50 கிராம் |
| 2. | மிளகு | 50 ,, |
| 3. | காவிக்கல் | 50 ,, |
| 4. | சூரத்கடுக்காய்த் தோல் | 150 ,, |
| 5. | ஆவாரம் பட்டை | 150 ,, |

புகையிலையை மண் சட்டியிலிட்டு கருஞ்சிவப்பாக வறுத்து நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். மற்ற

சரக்குகளையும் தனியே நன்ருகப் பொடித்து இரண்டையும் ஒன்ருகச் சேர்த்துக் கலந்து வைக்கவும்.

**அளவு :** பற்பொடியாக உபயோகிக்கக் கூடியது.

**தீரும் நோய் :** பல்வலி, எகிறுசீழ்வடிதல், பல் துலக்க.

# பிரிவு 16

## ரோகனியாத் (எண்ணெகள்)

### ரோகன் (எண்ணெ) செய்யும் முறை

எள்ளு, பாதம் பருப்பு, போன்ற எண்ணெச் சரக்குகளினின்றும் குறிப்பிட்ட முறைப்படி எண்ணெகள் பிழிந்தெடுத்து பெயரிடப்படுகின்றன. ஆனல் எண்ணெ வகைகளில் சரக்குகளின் குணங்களை கிரகித்து உள்ளுக்கும், வெளியிலும் உபயோகிப்பதுண்டு. அதற்கென்று சிலமுறைகள் ஆங்காங்கு குறிப்பிடப்படுகின்றன. யுனனி வைத்திய முறையில், பெரும்பாலும் எண்ணெகளை உட்கொள்வதில்லை.

### 137. ரோகன் ஆஸம்

| | | |
|---|---|---|
| 1. | அப்ஸன்தீன் | 10 கிராம் |
| 2. | மஞ்சள் | 10 ,, |
| 3. | பூண்டு | 10 ,, |

| | | |
|---|---|---|
| 4. | கோஷ்டம்—கசப்பு | 20 கிராம் |
| 5. | பாதம் பருப்பு—கசப்பு | 20 ,, |
| 6. | ஓமம் | 5 ,, |
| 7. | சுக்கு | 5 ,, |
| 8. | அதிமதுரம் | 5 ,, |
| 9. | பூரே அர்மனி | 2.5 ,, |
| 10. | கும்மட்டிக்காய் | 2.5 ,, |
| 11. | அக்ராகாரம் | 2.5 ,, |
| 12. | வெள்ளை வெங்காயம் | 2 Nos. |
| 13. | சதாப் இலைச்சாறு | 20 மி.லி. |
| 14. | பாகல் இலைச்சாறு | 20 ,, |
| 15. | முள்ளங்கிச்சாறு | 20 ,, |
| 16. | நல்லெண்ணெய் | 2000 கிராம் |

முதல் 12 சரக்குகளை இடித்துப் பொடித்து, 500 மி.லி பசுவின் பாலில் 8 மணி நேரம் ஊற வைத்துப் பிறகு மற்ற சாறுகளையும், எண்ணெயையும் சேர்த்துக் காய்ச்சிப்பதத்தில் வடிக்கட்டி வைக்கவும்.

**அளவு:** காதுகளுக்குச் சொட்டு மருந்தாக உபயோகிக்கக் கூடியது.

**தீரும் நோய்:** காதுவலி, காதில் கசிவு முதலியன.

## 178. ரோகன் பனப்ஷா

| | | |
|---|---|---|
| 1. | குலே-பனப்ஷா | 50 கிராம் |
| 2. | நல்லெண்ணெய் | 250 ,, |

முதல் சரக்கை 1200 மி.லி. தண்ணீரில் 8 மணி நேரம் ஊர வைத்துப் பிறகு காய்ச்சி வடிக்கட்டிய கஷாயத்துடன் நல்லெண்ணெயைச் சேர்த்துச் சிறு தீயில் காய்ச்சிப்பதத்தில் இறக்கி வடிக்கட்டி வைக்கவும்.

**அளவு:** வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் நோய்:** மயிர் உதிர்தல், தூக்கமின்மை, மூளைக்குக் குளிர்ச்சியை உண்டாக்க.

## 139. ரோகன் பாதம்

1. இனிப்பு பாதம் பருப்பு 1 கிராம்

பாதம் பருப்பில் சிறிதளவு தண்ணீர் தெளித்து ஆலையிலிட்டு (செக்கு) எண்ணெய் எடுக்கவும்.

**அளவு:** 10—20 சொட்டுகள் பசுவின் பாலுடன்

**தீரும் நோய்:** தூக்கமின்மை, (வெளிபூச்சு) உஷ்ணம் அதிகரித்தவர்களுக்கு மலமிளக்கி.

## 140. ரோகன் குல்

1. பச்சை ரோஜா மொக்கு 80 கிராம்
2. நல்லெண்ணெய் 500 ,,

ரோஜா மொக்கின் இதழ்களைப் பிரித்து எடுத்து அவற்றை நல்லெண்ணெயில் சேர்த்து சூரிய வெப்பத்

தில் வைக்கவும். இதழ்களிலிருந்து, தண்ணீர் வற்றிச் சுருங்கிய பிறகு, எண்ணையை வடிகட்டிக் கொள்ளவும்.

**அளவு :** வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் நோய் :** வலியுள்ள இடத்தில் பூசி ஒத்தடம் கொடுக்க, நாட்பட்ட தலைவலியிலும், கண் எரிச்சலிலும் தலைக்குத் தேய்த்து ஸ்நானம் செய்ய.

## 141. ரோகன் குஸ்ட்

| | | |
|---|---|---|
| 1. | கசப்பு கோஷ்டம் | 108 கிராம் |
| 2. | ஜடாமாஞ்சில் | 108 ,, |
| 3. | பன்னீர் | 1440 மி.லி. |
| 4. | நீர் நாய் விதை (ஜுந்த்) | 30 கிராம் |
| 5. | மிளகு | 30 ,, |
| 6. | பர்பியூன் | 30 ,, |
| 7. | நல்லெண்ணெய் | 1440 மி.லி. |

முதல் 2 சரக்குகளை நன்ருக இடித்துப் பொடித்துப் பன்னீர், எண்ணை இவற்றுடன் சேர்த்துப் பன்னீரெல்லாம் ஆவியாக மாறி வற்றும் வரைக் காய்ச்சி வடிகட்டி அத்துடன் நெ. 4, 5, 6 சரக்குகளைப் பொடித்துச் சேர்த்து கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** வெளியில் உபயோகிக்கக் கூடியது.

**தீரும் நோய் :** சுளுக்கு, தசைச்சிதைவு, பாரிச வாயு, கபவியாதிகள்.

## 142. ரோகன் காஸ்

| | | |
|---|---|---|
| 1. | நல்லெண்ணெய் | 400 கிராம் |
| 2. | எருக்கன் இலை | 50 ,, |
| 3. | ஊமத்தன் இலை | 50 ,, |
| 4. | ஆமணக்கு இலை | 50 ,, |
| 5. | தேன் மெழுகு | 75 ,, |
| 6. | வங்கச் செந்தூரம் | 25 ,, |
| 7. | கொம்பரக்கு | 25 ,, |

இலை வகைகளை உரலிலிட்டு நன்றாக அரைத்துச் சாறு எடுத்து வடிக்கட்டி அவற்றுடன் நல்லெண்ணையைக் கலந்து காய்ச்சிப் பதத்தில் இறக்கி வடிக்கட்டி தேன் மெழுகு, பொடித்த கொம்பரக்கு, வங்கசெந்தூரம் ஆகியவற்றைக் கலந்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் நோய் :** சொரி, சிரங்கு, வறண்டநிலையிலும், கசிவு நிலையிலும், உள்ள சரும நோய்கள், வலியுள்ள இடத்தில் தடவி ஒத்திடம் கொடுக்க.

## 143. ரோகன் மோம்

| | | |
|---|---|---|
| 1. | தேன் மெழுகு | 40 கிராம் |
| 2. | சோற்றுப்பு | 120 ,, |

தேன் மெழுகை சிறு துண்டுகளாகச் செய்து, உப்புடன் கலந்து வாலையிலிட்டு எரித்து அர்க்கம் செய்யும் முறைபோல் ஆவியைக் குளிரச் செய்து எண்ணையைச் சேகரிக்கவும்.

**அளவு :** வெளி உபயோகத்திற்கு.

**தீரும் நோய் :** பூட்டு வலிகளில் தேய்க்க.

## 144. ரோகன் மஸ்தகி

| | | |
|---|---|---|
| 1. | மஸ்தகி | 200 கிராம் |
| 2. | நல்லெண்ணை | 1000 ,, |

மஸ்தகியை நன்ருகப் பொடித்துக் கொள்ளவும். நல்லெண்ணையை நன்ருகக் காய்ச்சி இறக்கி மஸ்தகியை எண்ணையின் மேல் தூவி நன்ருகக் கலந்து புட்டிகளில் ஊற்றி வெய்யிலில் 7 நாட்கள் வைக்கவும்.

**அளவு :** வெளி உபயோகத்திற்கு.

**தீரும் நோய் :** கசிவு உள்ள படைகளில் மேற்பூச்சாக உபயோகிக்கலாம்.

## 145. ரோகன் ஸதாப்

| | | |
|---|---|---|
| 1. | ஸதாப் இலை | 1. கி. கி. |
| 2. | நல்லெண்ணை | 18 லீடர் |

ஸதாப் இலை 1 கி.கிராம் எடுத்து 2 லீடர் தண்ணீர் சேர்த்து அரைத்து எடுத்து வடிக் கட்டிய சாற்றுடன் நல்லெண்ணையைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வடிக் கட்டி வைக்கவும்.

**அளவு**: வெளி உபயோகத்திற்கு.

**தீரும் நோய்**: படை முதலிய சருமவியாதிகள், சொறி, சிரங்குகள், மூட்டு வலியும் வீக்கமும்.

## 146. ரோகன் ஸுர்க்

| | | | |
|---|---|---|---|
| 1. | மஞ்ஜிஷ்டி | 380 | கிராம் |
| 2. | ஸலீகா | 75 | ,, |
| 3. | ஜாதிக்காய் | 20 | ,, |
| 4. | கல் பாசி | 75 | ,, |
| 5. | ஜடாமாஞ்சில் | 38 | ,, |
| 6. | கோரைக் கிழங்கு | 38 | ,, |
| 7. | சந்தனம் வெள்ளை | 38 | ,, |
| 8. | எட்டிக் கொட்டை சுத்தி செய்தது | 38 | ,, |
| 9. | மேதாலக்டி | 38 | ,, |
| 10. | லவங்கப்பத்திரி | 19 | ,, |
| 11. | லவங்கம் | 10 | ,, |
| 12. | லவங்கப் பட்டை | 19 | ,, |
| 13. | மஞ்சள் | 19 | ,, |
| 14. | மர மஞ்சள் | 19 | ,, |

| | | |
|---|---|---|
| 15. | அகில்கட்டை | 19 கிராம் |
| 16. | கிச்சிலிக் கிழங்கு | 94 ,, |
| 17. | சிறு ஏலம் | 30 ,, |
| 18. | குங்குமப்பூ | 18 ,, |
| 19. | ஜாதிப்பத்திரி | 6 ,, |
| 20. | பன்னீர் | 700 மி. லீடர் |
| 21. | நல்லெண்ணை | 3 ,, |

முதல் 19 சரக்குகளை இடித்துப் பன்னீரில் 8 மணி நேரம் ஊர வைத்துப் பிறகு நல்லெண்ணையைச் சேர்த்து தண்ணீர் வற்றும் வரை காய்ச்சி இறக்கி வடிக் கட்டி வைக்கவும்.

**அளவு** : வெளி உபயோகத்திற்கு.

**தீரும் நோய்** : மூட்டு வலியும், வேக்காடு உள்ள நிலையிலும்.

## 147. ரோகன் தூர்ப்

| | | |
|---|---|---|
| 1. | முள்ளங்கிச்சாறு | 180 மி.லீ |
| 2. | நல்லெண்ணெய் | 60 கிராம் |

இரண்டு சரக்குகளையும் ஒன்று சேர்த்துத் தண்ணீர் வற்றும் வரை காய்ச்சிப் பதத்தில் வடிக் கட்டி வைக்கவும்.

**அளவு** : காதுகளுக்கு சொட்டு மருந்து.

**தீரும் நோய்** : காதுவலி,

## 148. ரோகன் ஸீர்

| | | |
|---|---|---|
| 1. | பூண்டு | 20 கிராம் |
| 2. | பர்பியூன் | 20 ,, |
| 3. | அக்ராகாரம் | 30 ,, |
| 4. | மிளகு | 10 ,, |
| 5. | ஸதாப் இலை | 10 ,, |
| 6. | ஆலிவ் எண்ணை | 1000 மி.லீ |

பூண்டின் மேல் தோலை நீக்கிச் சுத்தம் செய்து வைக்கவும். ஸதாப் இலையை அரைத்து சாற்றைப் பிழிந்து அத்துடன் ஆலிவ் எண்ணை, பொடித்த முதல் 4 சரக்குகள் இவற்றைச் சேர்த்து, தண்ணீர் வற்றும் வரைக்காய்ச்சி, இறக்கி, வடிக் கட்டி வைக்கவும்.

**அளவு** : வெளி உபயோகத்திற்கு.

**தீரும்நோய்** : பாரிசவாயு.

## 149. ரோகன் ஸக்மே ஹயாத்

| | | |
|---|---|---|
| 1. | நல்லெண்ணை | 1200 கிராம் |
| 2. | அதிமதுரம் | 10 ,, |
| 3. | மரமஞ்சள் | 10 ,, |
| 4. | வேப்பிலை உலர்ந்தது | 10 ,, |
| 5. | துத்தி இலை ,, | 10 ,, |
| 6. | மஞ்சள் | 10 ,, |
| 7. | துவான்ஸா | 10 ,, |

8. பூண்டு 10 கிராம்
9. தேன் மெழுகு 25 ,,
10. ஆட்டெலும்புச் சாம்பல் 25 ,,
11. வெடி மருந்து (துப்பாக்கி மருந்து) 25 ,,

நல்லெண்ணெ நீங்கலாக முதல் 7 சரக்குகளைப் பொடித்தும் பூண்டை சுத்தம் செய்து அரைத்தும் நல்லெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சிப் பக்குவத்தில் இறக்கி வடிக் கட்டி வைக்கவும். எண்ணெ சூடாக இருக்கும்போது சிறு துண்டுகளாகச் செய்த தேன் மெழுகையும் மற்ற சூரணங்களையும் சேர்த்து கலந்து வைக்கவும்.

**அளவு :** வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் நோய்:** சொறி, சிரங்குகள், சருமக் கோளாறுகள், நாட்பட்ட துஷ்டவிரணங்கள்.

# பிரிவு 17

## ருப்பேஜாத்

பசுமையான பழவகைகள், மலர்கள் இவைகளின் சாறுகளில் சர்க்கரை அல்லது கற்கண்டைச் சேர்த்துக் குறிப்பிட்ட பாகம் வரும் வரைக் காய்ச்சி இவைகள் தயாரிக்கப்படுகின்றன. உலர்ந்த சரக்குகளைக்

கொண்டும் இதைத் தயாரிப்பதுண்டு. அப்பொழுது உலர்ந்த சரக்குகளை தண்ணீரில் ஊரவைத்து அரைத்து பிழிந்தெடுத்த சாற்றில், சர்க்கரை அல்லது கற்கண்டைச் சேர்த்து தயாரிக்கப்படுகிறது. இது பானகத்தைக் காட்டிலும் சிறுது தடிப்பாக அமையும்.

## 150. ருப் அமிலா

1. பச்சை நெல்லிக்காய் 300 கிராம்
2. கற்கண்டு 1200 ,,

நெல்லிக்காயை இடித்து அதிலிருக்கும் கொட்டையை நீக்கி உரலிலிட்டு நன்ருக அரைத்துப் பிழிந்தெடுத்து வடிக் கட்டிய சாற்றில் கற்கண்டைக் கரைத்து காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு:** *12—24 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.*

**தீரும் நோய்:** உஷ்ணம் ஓங்கிய நிலையில் ஏற்படும் கல்லீரல் கோளாறுகள், பேதி, சோகை, குளிர்ச்சியான உரமேற்றி.

# பிரிவு 18

## ஸபூபாத் (சூரணங்கள்)

### சூரணங்கள் செய்யும் முறை

ஸபூப் என்னும் சொல்லுக்கு சூரணம் என்று பொருள். சரக்குகளை உரலில் அல்லது கல்வத்திலிட்டுப் பொடித்து, சலித்து இவைகள் தயாரிக்கப்படுகின்றன. சில சமயம் குறிப்பிட்ட சரக்குகளை அர்க்கம் அல்லது தண்ணீரைச் சேர்த்து அரைத்து நன்கு உலர்ந்த பின் பொடித்துச் சலித்து தயாரிப்பதுமுண்டு.

குறிப்பிட்ட சரக்குகள் நன்கு சுத்தம் செய்யப்பட்டு வெய்யிலில் உலர்த்தப்படுகின்றன. நன்கு உலர்ந்த பின் உரல், உலக்கை கொண்டோ அல்லது இயந்திரத்தின் உதவியாலோ அவை நுண்ணிய தூளாக்கப்படுகின்றன. நுண்ணிய அத்தூள் பெரும்பாலும் சல்லடை வழியே சலிக்கப்படுகிறது. துணியின் வழியே சலித்தும் சூரணம் தயார் செய்வதுண்டு. சிக்கனமான முறையில் பெருமளவில் சூரணங்களைத் துணியில் சலித்துத் தயார்செய்வது கடினம்—மேலும் துணியின் தரத்திற்கொப்ப உலோகச் சல்லடை வலைகள் தயாராகக் கிடைப்பதால் அவைகளைப் பயன்படுத்தி அதிகச் சிரமம் இல்லாமல் மேற்கூறிய

சூரணங்களைத் தயார் செய்வது எளிதாகிறது. எண்ணைப்பசை உள்ளவற்றிற்கு 40 அல்லது 60 நி. வலையும் மற்றவைகளுக்கு 80 அல்லது 100 நி. வலையும் உபயோகிக்கக் கிடைக்கின்றன. அவைகளைக் கொண்டு சல்லடை தயாரித்து உபயோகித்தல் நன்று.

முறையில் பல சரக்குகளைக் கூறுமிடத்து அவைகளை ஒவ்வொன்றையும் தனித்தனியே இடித்துச் சலித்துக் குறிப்பிட்ட அளவில் அவைகளைச் சூரணமாக்கி ஒன்று சேர்த்துத் தயாரிக்க வேண்டுமென்று ஒரு பக்ஷம். ஆயினும் நடைமுறையில் பெரும்பாலானோர் சரக்குகளையே குறிப்பிட்ட அளவில் எடுத்துச் சூரணங்களைத் தயார் செய்கின்றனர்.

இரண்டு மாதங்களுக்கு மேல் தங்காத அளவில் சூரணங்களைத் தயாரித்தல் வேண்டும்.

சர்க்கரை, கற்கண்டு, கற்பூரம், காவிக்கல், மூசாம்பரம், திராக்ஷை, பேரீச்சங்காய், பெருங்காயம், வங்காரம், படிக்காரம், உப்பு வகைகள் இவைகளை எல்லாச் சரக்குகளுடனும் சேர்த்துப் பொடித்தல் கூடாது. அவைகளைத் தனித்தனியே பொடித்துச் சேர்க்க வேண்டும்.

மூசாம்பரம், திராக்ஷை, பேரீச்சங்காய் இவைகளைச் சலித்த சூரணம் சிறிது சேர்த்து இடித்துச் சலித்துச் சேர்க்க வேண்டும்.

பெருங்காயம், வங்காரம், படிக்காரம், உப்பு வகைகள் இவைகளைப் பொரித்துப் பொடித்துச் சலித்துச் சேர்க்க வேண்டும்.

திப்பிலியைச் சற்று வறுத்துச் சேர்ப்பது நலம். பின்னர் எல்லாவற்றையும் ஒன்று படக் கலந்து பீங்கான் அல்லது கண்ணுடி ஜாடியில் பத்திரப்படுத்தவும். கசிவு ஏற்படும்படி காகிதத்திலோ தகரத்திலோ வைத்தல் கூடாது.

நவாசாரம், வெடியுப்பு போன்ற சரக்குகள் சேர்ந்த சூரணங்களைக் காற்றுபுகாத குப்பிகளில் பத்திரப்படுத்துதல் வேண்டும். இல்லாவிடில் சூழ்நிலையிலுள்ள ஈரத்தை அச் சரக்குகள் கிரகித்துக் கொள்வதால், சூரணம் சீர் கேடடைய ஏதுவாகும். இதைத் தவிர்க்க சுண்ணும்பை ஒரு துணியில் கட்டிக் குப்பியின் உட்புறம் மூடியின் வழியே தொங்க விடுவதுமுண்டு.

**ஜோஷந்தா :**

கஷாயமாக்கி உட்கொள்ளவும் கொப்பளித்தல் ரணங்களைக் கழுவுதல், குளித்தல் போன்ற வெளி உபயோகத்திற்கும் சரக்குகள் ஒன்றிரண்டாகத் தூளாக்கப்பட்டு உபயோகிக்கப்படுகின்றன. இதற்கு ஜோஷந்தா எனப்பெயர்.

சரக்குகளை நன்கு உலர்ந்த பின் பொடித்து இவைகள் தயாரிக்கப்படுகின்றன.

# ஸ்பூப்

## 151. ஸபூப் ஹப்ஸுத்தம்

| | | |
|---|---|---|
| 1. | ஸங்கே ஜராஹத் | 30 கிராம் |
| 2. | கோங்தே தாக் | 15 ,, |
| 3. | மாயீன் கலான் | 15 ,, |
| 4. | முத்துச் சிப்பி | 15 ,, |
| 5. | காவிக்கல் | 15 ,, |
| 6. | தமுல் அக்வயின் | 15 ,, |
| 7. | மாதுளம் பூ | 15 ,, |
| 8. | கற்கண்டு | 20 ,, |

முத்துச் சிப்பியை நெருப்பிலிட்டு நன்கு சிவப்பாகக் காய்ச்சிய பிறகு வெளியே எடுத்து ஆரவைக்கவும். எல்லாச் சரக்குகளையும் தனித் தனியே பொடித்துப் பிறகு எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து கலந்து வைக்கவும்.

**அளவு :** *1—1.50* கிராம்.

**தீரும் நோய் :** ரத்தம் கக்குதல், ரத்தவாந்தி, மூக்கிலிருந்து ரத்தம் கசிதல், மற்றும் பலவித ரத்தப் போக்குகள்.

## 152. ஸபூப் ஹாஸிம் ஸுர்க்

| | | |
|---|---|---|
| 1. | சீரண உப்பு (Soda Bicarb) | 100 கிராம் |
| 2. | ஏலக்காய் | 50 ,, |
| 3. | காவிக்கல் | 10 ,, |

எல்லாச்சரக்குகளையும் தனித்தனியே பொடித்துச் சலித்துப் பிறகு எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துக் கலந்து வைக்கவும்.

**அளவு :** 1—1.50 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** ஆகாரத்திற்கு முன்பு வாயுவைக் கலைக்கவும் ஆகாரத்திற்குப் பிறகு புளிப்பை மாற்றும் க்ஷாரமாகவும் உபயோகப்படுகிறது.

## 153. ஸஃப் இந்திரி ஜுல்லாப்

| | | |
|---|---|---|
| 1. | வெடியுப்பு | 7 கிராம் |
| 2. | ரேவல்சின்னிகட்டை | 7 ,, |
| 3. | யவக்ஷாரம் | 6 ,, |
| 4. | ஜீரகம் | 12 ,, |
| 5. | கற்கண்டு | 144 , |

எல்லாச் சரக்குகளையும் தனித்தனியே இடித்துப் பொடி செய்து சலித்துப் பிறகு எல்லாச் சரக்குகளையும் ஒன்று சேர்த்துக் கலந்து வைக்கவும்.

**அளவு :** 3—6 கிராம் மோருடன் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** நீர்ப்பை அழற்சி, அதில் ஏற்படும் ரணங்களைச் சுத்தம் செய்யவும், ஆற்றவும்.

## 154. ஸபூப் காஸரேஹ்

| | | |
|---|---|---|
| 1. | வெள்ளை ஜீரகம் | 100 கிராம் |
| 2. | ஓமம் | 70 ,, |
| 3. | கரியுப்பு | 40 ,, |
| 4. | மிளகு | 40 ,, |

எல்லாச் சரக்குகளையும் ஒன்ருகச் சேர்த்து நன்ருகப் பொடித்து வைக்கவும்.

**அளவு :** 1—2 கிராம் 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** வாயுவைக் கலைக்க (உப்புசத்தைப் போக்க).

## 155. ஸபூப் நமக் ஸுலைமானிகாஸ்

| | | |
|---|---|---|
| 1. | கல்லுப்பு | 70 கிராம் |
| 2. | இந்துப்பு | 70 ,, |
| 3. | நாட்டு நவாசாரம் | 70 ,, |
| 4. | இந்தராணி உப்பு | 70 ,, |
| 5. | மிளகு | 10 ,, |
| 6. | தொக்மே-கரப்ஸ் | 10 ,, |
| 7. | ஜாதிப்பத்திரி | 10 ,, |
| 8. | கருஞ்சீரகம் | 10 ,, |
| 9. | லவங்கம் | 10 ,, |
| 10. | சுக்கு | 10 ,, |
| 11. | ஓமம் | 10 ,, |
| 12. | காடி | வேண்டிய அளவு |

முதல் 4 சரக்குகளைக் கல்வத்திலிட்டு நன்றாக அரைத்து வைக்கவும். மற்ற சரக்குகளையும் பொடித்துச் சலித்து கொள்ளவும். எல்லாச் சூரணங்களை ஒன்றாகக் கலந்து காடியுடன் சேர்த்து உலரற வைத்துப் பொடித்து பத்திரப்படுத்தவும்.

**அளவு :** 3 கிராம் 1 நாளைக்கு 2 வேளை சாப்பாட்டிற்குப்பின்.

**தீரும் நோய்** : பசியின்மை அசீரணம், கபத்தினால் ஏற்படும் மற்றும் பலவயிற்றுக் கோளாறுகள்.

**குறிப்பு :** இந்தராணி உப்புக்கு பதில் கல்லுப்பு சேர்ப்பதுண்டு.

## 156. ஸபூப் ஸறு

1. சூரத் நிலாவாரை 50 கிராம்
2. சுக்கு 50 ,,
3. சூரத் கடுக்காய்த் தோல் 50 ,,
4. கரியுப்பு 50 ,,

எல்லாச் சரக்குகளையும் சுத்தம் செய்து ஒன்றாக இடித்து பொடித்துச் சலித்து வைக்கவும்.

**அளவு** : 3—6 கிராம் 1 நாளைக்கு 1 அல்லது 2 வேளை,

**தீரும் நோய்:** பேதியாக்கி, வாத, பித்த, கபம் என்ற தோஷங்களைச் சரீரத்திலிருந்து அகற்ற.

## 157. ஸபூப்ஸூரன்ஜான்.

| | | |
|---|---|---|
| 1. | ஸூரன்ஜான் | 40 கிராம் |
| 2. | வெள்ளை ஜீரகம் | 10 ,, |
| 3. | சூரத் நிலாவாரை | 20 ,, |
| 4. | உலர்ந்த புதினு | 10 ,, |
| 5. | சூரத் கடுக்காய்த் தோல் | 30 ,, |
| 6. | கற்கண்டு | 110 ,, |

முதல் 5 சரக்குகளை உரலிலிட்டு இடித்துப் பொடித்து சலித்து வைக்கவும். கற்கண்டைக் கல்வத்திலிட்டு நன்ருக அரைத்து எல்லாவற்றையும் ஒன்ருக சேர்த்து கலந்து வைக்கவும்.

**அளவு:** 3–6 கிராம் 1 நாளைக்கு 1 அல்லது 2 வேளை.

**தீரும் நோய்:** ஆமவாதம்; அதனுலும், மற்ற காரணங்களாலும் ஏற்படும் மூட்டு வலிகள்.

## 158. ஸபூப்ஸூர்பா

| | | |
|---|---|---|
| 1. | மிளகு | 40 கிராம் |
| 2. | ஓமம் | 40 ,, |

3. இந்துப்பு 40 கிராம்
4. கரியுப்பு 40 ,,
5. வெங்காரம் 40 ,,
6 ஆடாதோடை இலை 165 இலைகள்
7. திப்பிலி 40 கிராம்

வெங்காரத்தைத் தண்ணீரெல்லாம் ஆவியாகிப் போகும் வரை வறுத்து வைக்கவும். ஆடாதோடை இலைகளை வெய்யிலில் உலரவைத்துப் பொடித்து வைக்கவும். பிறகு எல்லாச் சரக்குகளையும் நன்ருகப் பொடித்துச் சலித்து ஒன்று சேர்த்துக் கலந்து வைக்கவும்

**அளவு :** 1—1·5 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** இருமல், மார்சளி, தொண்டை அழற்சி.

## 159. ஸபூப்தபாஷீர்ஸதேகுலுவாலா

1. மூங்கிலுப்பு 50 கிராம்
2. சீந்தில் சர்க்கரை 50 ,,
3. ஏலரிசி 50 ,,
4. கற்கண்டு 175 ,,

4 சரக்குகளையும் தனித்தனியே பொடித்துப் பிறகு எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துக் கலந்து வைக்கவும்.

**அளவு :** 3 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** ஆரம்பக்ஷயம், உஷ்ணம் ஓங்கிய நிலையில் கல்லீரலில் ஏற்படும் கோளாறுகள், போஷாக்குக் குறைவால் ஏற்படும் கோளாறுகள்.

## 160. ஸபூப் துர்புக்

| | | |
|---|---|---|
| 1. | சிவதை | 100 கிராம் |
| 2. | சுக்கு | 10 ,, |
| 3. | மஸ்தகி | 10 ,, |
| 4. | கற்கண்டு | 120 ,, |

முதல் 2 சரக்குகளை இடித்துப் பொடித்துச் சலித்து வைக்கவும். மஸ்தகியைக் கல்வத்திலிட்டு லேசாக அரைத்துக் கொள்ளவும். கற்கண்டை அரைத்து எல்லாச் சூர்ணங்களையும் ஒன்று சேர்த்து நன்கு கலந்து வைக்கவும்.

**அளவு :** 6 கிராம் 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** ஆமவாதமூட்டுவலி, அழற்சி.

# பிரிவு 19

## ஸிகஞ்ஜபீனுத்

காடிகள் சேர்த்துத் தயாரித்த பானங்களை ஸிகஞ்ஜபீன் எனக் கூறுவது வழக்கம்.

### 161. ஸிகன்ஜபீன் பூஸூரிமோதநில்

| | | |
|---|---|---|
| 1. | காஸினி வேர் | 30 கிராம் |
| 2. | வெள்ளரி விதை | 30 ,, |
| 3. | காஸினி விதை | 60 ,, |
| 4. | திராக்ஷைக் காடி | 180 மி.லீ |
| 5. | சர்க்கரை | 390 கிராம் |

முதல் 3 சரக்குகளை 2400 மி.லீ. தண்ணீரில் 6 மணி நேரம் ஊற வைத்துப் பிறகு பாதி வற்றும் வரைக் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்தில் 4, 5 சரக்குகளை சேர்த்துக் காய்ச்சிப் பாகு பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 7–15 மி. லீ. 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** பித்தம், அசீரணம், வயிற்று உப்புசம், புளித்த ஏப்பம்.

### 162. ஸிகன்ஜபீன் ஸாதா

| | | |
|---|---|---|
| 1. | திராக்ஷைக்காடி | 600 மி.லீ |
| 2. | சர்க்கரை | 1200 கிராம் |

சர்க்கரையைத் திராக்ஷைக் காடியில் கரைத்துக் காய்ச்சி வடிகட்டி, பிறகு மறு முறையும் காய்ச்சிப் பாகு பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு** : *7–15 மி.லி. 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.*

**தீரும் நோய்** : *அசீரணம், வயிற்றில் சேர்ந்த பித்தத்தின் கோளாறை அகற்ற.*

# பிரிவு 20

## ஷர்பத்—பானகங்கள்

### ஷர்பத் செய்யும் முறை

பசுமையான சரக்குகளிலிருந்து பிழிந்தெடுத்த சாறு அல்லது உலர்ந்த சரக்குகளைக் கொண்டு தயாரித்த கஷாயம் இவைகளில் சர்க்கரை, கற்கண்டு அல்லது தேன் சேர்த்து குறிப்பிட்ட பதம் வரைக் காய்ச்சி இவைகள் தயாரிக்கப்படுகின்றன. சாறு அல்லது கஷாயம் இவைகளின் தடிப்பின் தரத்திற் கேற்ப பாகுகளின் பதத்தை நிர்ணயிக்க வேண்டும். இவைகளை குப்பிகளிலோ பீங்கான் பாத்திரங்களிலோ பத்திரப்படுத்த வேண்டும்.

## 163. ஷர்பத் ஏஜாஸ்

| | | |
|---|---|---|
| 1. சீமை இலந்தம் பழம் | 30 | எண்ணிக்கைகள் |
| 2. ஸபிஸ்தான் | 90 | ,, |
| 3. அதிமதுரம் | 24 | கிராம் |
| 4. கித்மி-விதை | 24 | ,, |
| 5. குபாஸி-விதை | 24 | ,, |
| 6. தாமரைப் பூ | 24 | ,, |
| 7. குலே பனப்ஷா | 24 | ,, |
| 8. பிஹீ விதை | 18 | ,, |
| 9. பாதம் பிசின் | 10.5 | ,, |
| 10. வேலம் பிசின் | 10.5 | ,, |
| 11. ஆடாதோடை இலை | 480 | ,, |
| 12. கற்கண்டு | 960 | ,, |

நெ. 1,2,8 சரக்குகளை 1200 மி.லீ. தண்ணீரில் 6 மணி நேரம் ஊரவைத்து அதன் வழவப்பான சாற்றை எடுத்து வைக்கவும். நெ. 3–7, 11 சரக்குகளை 1200 மி.லீ. தண்ணீரில் 6 மணி நேரம் ஊர வைத்துக் காய்ச்சி கஷாயத்தை வடிகட்டி வைக்கவும். இரண்டையும் ஒன்றுகக் கலந்து அதில் கற்கண்டையும் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி நெ. 9, 10 சரக்குகளைத் தனித்தனியே பொடித்து பாகத்தில் சேர்த்துக் கலந்து வைக்கவும்.

**அளவு** : 15—30 மி.லீ. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்** : வறட்டு இருமல், நாட்பட்ட உள் அழற்சி.

## 164. ஷர்பத் அனார் ஷீரின்

1. இனிப்பு மாதுளம் பழச்சாறு 720 மி. லீ.
2. சர்க்கரை 1440 கிராம்

வடிகட்டிய சாற்றுடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சிப்பாகு பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு:** *:0 மி.லீ. 1 நாளைக்கு 2 அல்லது 3* வேளை.

**தீரும் நோய்:** கோடைக்கால பேதி, உஷ்ணத்தினால் ஏற்படும் கல்லீரல் கோளாறுகள்.

## 165. ஷர்பத் அனார் துர்ஷ்

1. புளிப்பு மாதுளம் பழச் சாறு 600 மி.லீ.
2. அகில் கட்டை 10 கிராம்
3. நெல்லிக்காய் 10 ,,
4. சர்க்கரை 1200 ,,

நெ. 2-3 சரக்குகளுடன் 500 மி.லீ. தண்ணீரைச் சேர்த்துக் காய்ச்சி இறக்கி ஆறிய பிறகு வடிகட்டி புளிப்பு மாதுளம் பழச் சாற்றுடன் கலந்து சர்க்கரையையும் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு:** *10 மி.லீ. 1 நாளைக்கு 2 அல்லது 3* வேளை.

**தீரும் நோய்:** பேதி, கல்லீரலையும், இரைப்பை யையும் குளுமைப்படுத்த.

## 166. ஷர்பத் பேல்பல்

1. வில்வப்பழச் சாறு 600 மி.லி.
2. சர்க்கரை 1200 கிராம்

நன்றாகப் பழுத்த வில்வபழங்களின் சாற்றை எடுத்து, அத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு:** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** நாட்பட்ட சீதக்கடுப்பு, ரத்தக் கடுப்பு, கல்லீரல் கோளாறுகள்.

## 167. ஷர்பத் பனப்ஷா

1. குலே பனப்ஷா 90 கிராம்
2. சர்க்கரை 720 ,,

குலேபனப்ஷாவை 1200 மி.லி. தண்ணீரில் 6 மணி நேரம் ஊற வைத்துக் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்தில் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு:** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** வறட்டு இருமல், தூக்கமின்மை, நாட்பட்ட சுரங்கள், மார்படபடப்பு.

## 168. ஷர்பத் பூஸாரீமோதத்தில்

| | | |
|---|---|---|
| 1. சோம்பு | 40 | கிராம் |
| 2. காஸினிவிதை | 40 | ,, |
| 3. வெள்ளரிவிதை | 40 | ,, |
| 4. முலாம்பழவிதை | 40 | ,, |
| 5. சோம்பு வேர் | 80 | ,, |
| 6. காஸினிவேர் | 80 | ,, |
| 7. கற்கண்டு | 1280 | ,, |

முதல் 6 சரக்குகளை லேசாக இடித்து, 2400 மி.லி. தண்ணீரில் 6 மணி நேரம் ஊற வைத்துக் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் கற்கண்டைக் கலந்து காய்ச்சி பாகுபதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** குண்டிக்காய் அழற்சி, மூத்திர தாரை அழற்சி. பொதுவில் நீரைப் பிரிக்கவும், குளிர்ச்சி உண்டாக்கவும்.

## 169. ஷர்பத் அனனாஸ்

| | | |
|---|---|---|
| 1. அன்னாசிப்பழச்சாறு | 600 | மி.லி. |
| 2. சர்க்கரை | 1200 | கிராம் |

அன்னாசிப்பழத்தைச் சிறு துண்டுகளாக வெட்டி, மர உரலில் இடித்து 600 மி.லி. சாற்றை எடுத்து, சர்க்கரையை சேர்த்துக் காய்ச்சி பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு.** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** குளிமை அளிக்கவும், நீரைப் பிரிக்கவும்.

## 170. ஷர்பத் நீனூர்

| | | | |
|---|---|---|---|
| 1. | காஸினிவிதை | 20 | கிராம் |
| 2. | தாமரைப்பூ | 10 | ,, |
| 3. | ரோஜா மொக்கு | 20 | ,, |
| 4. | காஸினிவேர் | 40 | ,, |
| 5. | கௌஸபான் | 10 | ,, |
| 6. | கஸூஸ் விதை | 10 | ,, |
| 7. | ரேவல் சின்னிகட்டை | 12.50 | ,, |
| 8. | கற்கண்டு | 480 | ,, |

முதல் 7 சரக்குகளை லேசாக இடித்து 1200 மி.லி. தண்ணீரில் 6 மணி நேரம் ஊர வைத்துப் பிறகு காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் கற்கண்டைச் சேர்த்துக் காய்ச்சி பாகுப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு:** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்:** கல்லீரல் இயக்கத்தில் ஏற்படும் கோளாறுகள், அதனால் ஏற்படும் மலச்சிக்கல், காமாலை முதலியன,

## 171. ஷர்பத் பர்யாத்ரஸ்

| | | |
|---|---|---|
| 1. | கௌஸபான் | 20 கிராம் |
| 2. | சந்தனம் வெள்ளை | 20 ,, |
| 3. | பர்ஸி யோஷான் | 20 ,, |
| 4. | ஊதே ஸலீப் | 20 ,, |
| 5. | கசகசா | 20 ,, |
| 6. | அதிமதுரம் | 10 ,, |
| 7. | கித்மி விதை | 10 ,, |
| 8. | ரோஜா மொக்கு | 10 ,, |
| 9. | சோம்பு | 1 ,, |
| 10. | கசகசா தோலுடன் | 5 எண்ணிக்கை |
| 11. | திராக்ஷை | 25 எண்ணிக்கை |
| 12. | சர்க்கரை | 800 கிராம் |

முதல் 11 சரக்குகளை லேசாக இடித்து 2400 மி.லி. தண்ணீரில் 6 மணி நேரம் ஊர வைத்துப் பிறகு காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் சர்க்கரையைக் கலந்து காய்ச்சி பதத்தில் இறக்கி வைக்கவும்.

அளவு : 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** ஜலதோஷம், இருமல், மற்றும் தொண்டையைப் பற்றியக் கோளாறுகள்,

## 172. ஷர்பத் குலாப்

| | | |
|---|---|---|
| 1. | பன்னீர் | 720 மி.லி. |
| 2. | சர்க்கரை | 1440 கிராம் |

சர்க்கரையை பன்னீரில் கலந்து காய்ச்சிப் பாகு பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு:** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** நரம்புகளுக்கு அமைதியைக் கொடுக்க. வறட்சியாலும், உஷ்ணத்தினாலும், கல்லீரலில் ஏற்படும் நோய்களுக்கு அளிக்கப்படும் ஔடதங்களுடன் அனுபானமாக

## 173. ஷர்பத் குடால்

| | | |
|---|---|---|
| 1. | குடால் காம் (செம்பரத்தம்பூ) | 80 கிராம் |
| 2. | ஸபிஸ்தான் | 50 ,, |
| 3. | பாலக் விதை | 50 ,, |
| 4. | உன்னாப் | 20 ,, |
| 5. | அதிமதுரம் | 50 ,, |
| 6. | சர்க்கரை | 750 ,, |

முதல் 5 சரக்குகளை 1200 மி.லி. தண்ணீரில் 6 நேரம் ஊற வைத்துக் காய்ச்சி வடிக்கட்டிய கஷாயத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** உஷ்ண நிலையில் ஏற்படும் இருமலும், ஜுரமும்.

## 174. ஷர்பத் ஜாமுன்

1. நாகப் பழச்சாறு 720 மி.லி.
2. சர்க்கரை 2160 கிராம்

நன்றாகப் பழுத்த நாகப்பழங்களை தண்ணீரில் கழுவி 720 மி.லி. சாற்றை எடுத்து அத்துடன் சர்க்கரையைக் கலந்து காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** நாட்பட்ட பேதி, உஷ்ண நிலையில் ஏற்படும் கல்லீரல் கோளாறுகள்.

## 175. ஷர்பத் கேவ்டா

1. தாழம் பூத்திநீர் 600 மி. லி.
2. சர்க்கரை 1200 கிராம்

சர்க்கரையை தாழம் பூத்திநீரில் சேர்த்துக் காய்ச்சி பாகு பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 15-30 மி. லி. 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்:** வெப்பம் அதிகரித்த நேரங்களில் வெப்பத்தைத் தணித்து, அதிக தாகத்தையும் தணித்து உற்சாகத்தை அளிக்கக் கூடிய குளிர்ந்த பானகம், நரம்புக்கு அமைதியை உண்டாக்க.

## 176. ஷர்பத் க்யாரேஷம்பர்

| | | |
|---|---|---|
| 1. | சரக்கொன்றை புளி | 100 கிராம் |
| 2. | சர்க்கரை | 300 ,, |

சரக்கொன்றைப் புளியை 600 மி.லீ. பன்னீரில் 6 மணி நேரம் ஊர வைத்து, நன்ருகக் கசக்கி வடி கட்டிய சாற்றுடன் சர்க்கரையைக் கலந்து காய்ச்சி பாகுபதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு:** 15—30 மி.லீ. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** கல்லீரல், மண்ணீரல்களின் அழற்சி, மூலம், மலச்சிக்கல்.

## 177. ஷர்பத் ஸூஆல்

| | | |
|---|---|---|
| 1. | கௌளா | 50 கிராம் |
| 2. | பாதரஞ்போயா இலை | 50 ,, |
| 3. | துக்மேகித்மி | 50 ,, |
| 4. | அதிமதுரம் | 50 ,, |
| 5. | துக்மே குப்பாஸி | 50 ,, |
| 6. | குலேபனப்ஷா | 50 ,, |
| 7. | பர்கே கௌஜபான் | 40 ,, |
| 8. | குலே ஜூபா | 100 ,, |

| | | |
|---|---|---|
| 9. | ஸபிஸ்தான் | 150 கிராம் |
| 10. | சர்க்கரை | 1800 ,, |

முதல் 9 சரக்குகளைத் தண்ணீரில் 6 மணி நேரம் ஊரவைத்து $\frac{1}{3}$ வற்றும் வரை காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் கற்கண்டைச் சேர்த்துக் காய்ச்சி பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 7-15 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய்:** சிக்கிய கபத்தை அறுத்து சுலபமாக வெளிப்படுத்த, வறட்டு இருமல்.

## 178. ஷர்பத் மதனீ

| | | |
|---|---|---|
| 1. | திராக்ஷைக்காடி | 140 மி. லீ |
| 2. | எலுமிச்சம் பழம் | 15 எண்ணிக்கைகள் |
| 3. | துருஞ்சிப் பழம் | 1 ,, |
| 4. | கொத்தமல்லி | 140 கிராம் |
| 5. | இஞ்சி | 140 ,, |
| 6. | புதினு | 140 ,, |
| 7. | ஏலக்காய் | 35 ,, |
| 8. | துருஞ்சிக்காய் தோல் | 35 ,, |
| 9. | ஜவுர் மோஹ்ரா | 35 ,, |
| 10. | பன்னீர் | 70 மி. லி. |
| 11. | சர்க்கரை | 840 கிராம் |

நெ 2—6 சரக்குகளின் சாற்றை எடுத்து வடிகட்டி அத்துடன் வேண்டிய அளவு தண்ணீரைச் சேர்த்து சாற்றை 1200 மி. லீ. அளவுக்கு கொண்டு வரவும். நெ. 7, 8 சரக்குகளை இடித்து மேற்படி சாற்

றில் 6 மணி நேரம் ஊரவைத்து, காய்ச்சி சாற்றை வடி கட்டி அத்துடன் சர்க்கரையைச் சேர்த்து காய்ச்சி பாகுபதத்தில் இறக்கி வைக்கவும். நெ. 9 சரக்கை பன்னீருடன் சேர்த்துக் கல்வத்தில் நன்ருக அரைத்து, உலரவைத்துப் பிறகு உலர்ந்த பொடியை பாகத்தில் சேர்த்துக் கலந்து வைக்கவும்.

**அளவு**: 7-15 மி. லீ. 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்**: குடற் கோளாறுகள், காலரா அதிகரித்த பித்தத்துடன் வாந்தி.

## 179. ஷர்பத் வர்த்ஸாதா

| | | |
|---|---|---|
| 1. | ரோஜா மொக்கு | 600 கிராம் |
| 2. | சர்க்கரை | 1200 ,, |

ரோஜா மொக்கை 2400 மி.லி. தண்ணீரில் 6 மணி நேரம் ஊர வைத்துக் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சி பாகு பதத்திற்குக் கொண்டு வந்து இறக்கி வைக்கவும்.

**அளவு**: 7—15 மி.லி. 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய்**: மலபந்தம், சிறு குடலில் சமனம் உண்டாக்க,

## 180. ஷர்பத் வர்த்முகெர்ரெர்

| | | |
|---|---|---|
| 1. | ரோஜா மொக்கு | 900 கிராம் |
| 2. | தண்ணீர் | 5400 மி.லி. |
| 3. | சர்க்கரை | 1800 கிராம் |

நெ. 1 சரக்கில் பாதி அளவு (450 கிராம்) எடுத்து. தண்ணீரில் 6 மணி நேரம் ஊர வைத்துப் பிறகு காய்ச்சிக் கசக்கி வடிக்கட்டிய அதே கஷாயத்தில் மீதியுள்ள பாதி அளவு (450 கிராம்) ரோஜா மொக்கை மீண்டும் 6 மணி நேரம் ஊர வைத்துப் பிறகு காய்ச்சி வடிகட்டி சர்க்கரையைக் கலந்து காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி வைக்கவும்.

அளவு : 15—30 மி.லி 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

தீரும் நோய் : வர்த்ஸாதாவைவிட அதிக குணம் உள்ளது. மலமிளக்கி, குளிமைபடுத்த, முக்கியமாக கல்லீரல் உஷ்ணத்தைத் தணிக்க.

## 181. ஷர்பத் உன்னுப்

| | | |
|---|---|---|
| 1. | சீமை எலந்தம்பழம் | 300 கிராம் |
| 2. | சர்க்கரை | 900 ,, |

சீமை எலந்தம்பழத்தை 1200 மி.லி. தண்ணீரில் 6 மணி நேரம் ஊர வைத்துக் கசக்கிக் காய்ச்சி வடிகட்டிய கஷாயத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 7—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** வறட்டு இருமல், மார்வலி, ரத்தத்தைச் சுத்தம் செய்ய.

## 182. ஷர்பத் உஷ்பா

| | | |
|---|---|---|
| 1. | நன்னாரி அர்க்கம் | 500 மி.லி. |
| 2. | சர்க்கரை | 1 கிலோ கிராம் |

அர்க்கத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சி பாகுபதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 15—30 மி.லி. 1 நாளைக்கு 2 வேளை.

**தீரும் நோய் :** பிரங்கரோகம், ரத்தம் கெட்டுள்ள நிலை.

## 183. ஷர்பத் ஜூபாயே முரக்காப்

| | | |
|---|---|---|
| 1. | அத்திப்பழம் | 10 எண்ணிக்கை |
| 2. | காஸினி விதை | 10.5 கிராம் |
| 3. | ஸோஸன்வேர் | 10.5 ,, |
| 4. | அதிமதுரம் | 10.5 கிராம் |
| 5. | சோம்பு | 10.5 ,, |
| 6. | கரப்ஸ் விதை | 18 ,, |
| 7. | பர்ஸியோஷான் | 21 ,, |
| 8. | ஜூபா | 24 ,, |
| 9. | திராக்ஷை | 108 ,, |
| 10. | சர்க்கரை | 960 ,, |

முதல் 9 சரக்குகளை 2400 மி.லீ. தண்ணீரில் 6 மணி நேரம் ஊரவைத்துக் கசக்கி காய்ச்சி வடி கட்டிய கஷாயத்துடன் சர்க்கரையைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கி வைக்கவும்.

**அளவு :** 15—30 மி.லீ. 1 நாளைக்கு 2 அல்லது 3 வேளை.

**தீரும் நோய் :** இரைப்பில் கோழையை வெளிப் படுத்த.

# பிரிவு 21

## ஸிமாத்

தண்ணீர் அல்லது எண்ணெயுடன் கலந்து, வெளி உபயோகத்திற்காக தயாரிக்கப்படும் சூரணத்திற்கு ஸிமாத் எனப்பெயர். இவைகளை போதுமான அளவு சூட்டுடன் வலி அல்லது வேக்காடு உள்ள இடங்களில் உபயோகிக்க வேண்டும்.

### 184. ஸிமாத் ஔஜா

| | | |
|---|---|---|
| 1. | மஞ்சள் | 30 கிராம் |
| 2. | மரமஞ்சள் | 30 ,, |
| 3. | மேதாலக்டி | 60 ,, |
| 4. | கோதுமை மாவு | 60 ,, |
| 5. | வெந்தயம் | 60 ,, |
| 6. | மூசாம்பரம் | 10 ,, |

நெ. 1-3,5,6 சரக்குகளை நன்ருகப் பொடித்துச் சலித்து கோதுமை மாவுடன் மற்ற சூரணங்களையும் ஒன்ருகக் கலந்து வைக்கவும்.

**அளவு :** வெளி உபயோகத்திற்கு திராக்ஷை காடியில், கலந்து துணி அல்லது லிண்டில் தடவிச் சூடாக்கிப் போடவும்.

### 185. ஸிமாத் ஹலாக்

| | | |
|---|---|---|
| 1. | ஜத்வார் | 10 கிராம் |
| 2. | ஜஹர் மோஹ்ரா | 10 ,, |
| 3. | கிச்சிலிக் கிழங்கு | 10 ,, |

மூன்று சரக்குகளையும் நன்றாகப் பொடித்துச் சலித்து வைக்கவும்.

**அளவு :** வெளி உபயோகத்திற்கு. வெந்நீரில் கலந்து பசையாகச் செய்து லிண்டில் தடவி வெளியில் போடவும்.

**தீரும் நோய் :** தொண்டையின் உள் பக்கக் கிரந்தி அழற்சி (டான்சில்ஸ்).

# பிரிவு 22

## ஜரூர் (தூவும் பவுடர்)

காயம், புண் இவைகளில் தூவுவதற்கென உலர்ந்த சரக்குகளைக் கொண்டு தயாரிக்கப்படும் சூரணத்திற்கு ஸரூர் எனப் பெயர்.

### 186. ஜரூர் மதனி

| | | |
|---|---|---|
| 1. | கத்தைக் காம்பு | 10 கிராம் |
| 2. | கற்பூரம் | 10 ,, |
| 3. | மாசிக்காய் | 10 ,, |
| 4. | படிகாரம் | 10 ,, |
| 5. | ரஸகற்பூரம் | 5 ,, |

| | | |
|---|---|---|
| 6. | மிருதார் சிருங்கி | 5 கிராம் |
| 7. | பாத ரஸம் | 5 ,, |

படிகாரத்தை ஒரு மண் அகலில் வைத்து அதிலிருக்கும் தண்ணீர் முழுதும் ஆவியாகும் வரை நன்ருக வருத்துப் பொடித்து வைக்கவும். மற்ற சரக்குகளையும் தனித்தனியே பொடித்துச் சலித்து எல்லாச் சூரணங்களையும் ஒன்ருகக் கலந்து வைக்கவும்.

**அளவு :** போதுமான அளவு வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் நோய் :** சிரங்குகளுக்கு தேங்காய் எண்ணையில் கலந்து பூசவும். முக்கியமாகப் பிரங்கி ரணங்களுக்கு.

## 187. ஜரூர்-குலா

| | | |
|---|---|---|
| 1. | ரோஜா மொக்கு | 10 கிராம் |
| 2. | மாதுளம்பூ | 10 ,, |
| 3. | ஏலரிசி | 10 ,, |
| 4. | கத்தைக்காம்பு | 10 ,, |
| 5. | வால் மிளகு | 10 ,, |
| 6. | அதிமதுரம் | 10 ,, |
| 7. | கற்பூரம் | 2.5 மி. கி |

நெ. 1—6 சரக்குகளை நன்ருக அரைத்துச் சலித்து வைக்கவும். கற்பூரத்தைக் கல்வத்திலிட்டு அரைத்துக் கொள்ளவும். இரண்டையும் ஒன்ருகக் கலந்து வைக்கவும்.

**அளவு :** வெளி உபயோகத்திற்கு மட்டும்.

**தீரும் நோய் :** வாய்ப்புண்.

**முற்றும்.**